# "LET US SAY THAT NEVER AGAIN SHALL THIS HORROR COME UPON US."

*"Give me not O God, that blind, fool faith in my friend that sees no evil where evil is, but give me, O God, that sublime belief that seeing evil I yet have faith."*

*"Seek Truth wherever you can find it," But, "Make your choice and stick to it till you reach the End."*

ஸத்தியம் வத—**SPEAK THE TRUTH.**

"HITCH YOUR WAGON TO A STAR." "TO THINE OWN SELF BE TRUE."



அன்பேயவன்: அறிவேசக்தி: ஓம் தத்ஸத்.] [God is Love: Knowledge is Power: *Aum.*

**"New Series"** ஸத்தியமே ஜெயம்—**SATYAMEVA JAYATE.** **"Approved"**

புத்தகம். **22.**] ஆனந்தஞு ஐப்பசிமீ, **1914**ஞு அக்டோபர்மீ [சஞ்சிகை **7.**

**"LET US SAY THAT NEVER AGAIN SHALL THIS HORROR COME UPON US."**

"THEN OUR CHILDREN MAY LOOK BACK WITH GRATITUDE TO THIS TREMENDOUS TIME AND SEE IN OUR AGONY THE DAWN OF THEIR BETTER DAY."

## " e Virtue of War."

"THERE IS VIRTUE IN WAR AS IN MEDICINE."

"It was a saying of John Bright that the only virtue of war was that it taught people geography. Between that view and the doctrine of Bernhardi and the Prussian military school that war is a sort of spiritual purgative from which a nation emerges strong and purified there is wide room for choice. But that war does teach us geography will not be questioned. Even the most inattentive schoolboy is interested in the subject to-day. The Continent has ceased to be a vague abstraction to him and has become as actual as the neighbouring football field. Maps are no longer dead things, but exciting realities. I have discovered like everybody else an inexhaustible appetite for them. They have ceased to be maps and have become forests and rivers and plains, cities and villages, echoing to the tramp of great armies and to the roar of guns. I no longer live in London. I live in the Vosges and the Ardennes. I know the windings of the Meuse and the Moselle better than I know the windings of the Thames and feel that I could find my way blindfold along the whole vast battle line."—*Mr. A. G. Gardiner.*

## "Roll up that Map."

It is said that when the news of Austrelitz came to Pitt he pointed to the map of Europe and said "Roll up that map. It will not be wanted these ten years."

A hundred and ten years later we are rolling up the map of Europe again. We are blotting out its lines in seas of blood. Let us take care that when we come to draw the new map for the generations that follow we do not draw it as Frederick William drew the plan of Berlin—with his sword. If we do, then we shall have only emerged from this world-war to begin building for another world-war. Let the new Europe that is to rise out of these red seas be the Europe of the people and not merely a new chessboard for the old players. Let us say that never again shall this horror come upon us that no nation shall be allowed to arm itself to the menace of the peace of the world, that Europe shall be policed by one force and that force shall be in the hands of one Executive representing all the Powers and that any attack on a nation by another nation shall be a crime against all, punishable by all.

"Then our children may look back with gratitude to this tremendous time and see in our agony the dawn of their better day."—*Ibid.*

## OUR INDIAN SOLDIERS.

Sir J. P. Hewett writes to the *London Times*:—

Lord Crewe's announcement that Indian soldiers are to fight side by side with our British forces in repelling the Invasion of France and the attack on Belgium has sent a thrill of joy through many who had begun to fear that these gallant troops would not be given this opportunity. Great Britain need have no fear that they will not justify this trust to the full. Their employment in this supreme struggle side by side with the best troops that the world knows will do more to make our rule in India popular than any other step that the Government could take. During this war India will remain as peaceful as England and at least 100,000 Indian Regulars could be brought to Europe without imperilling the quiet either of the border or of the interior of the country. May we hope that no time will be lost in dispatching the full number that can reasonably be spared; that a large body of native cavalry will form part of the contingent, and that Imperial Service troops, whose services have been offered by their chiefs, as well as a part of the Gurkha Army said to have been offered by the Prime Minister and Marshal of Nepal, may be allowed to accompany the Regular troops?

The splendid gift of over £300,000 presented by His Highness the Maharaja of Mysore, a ruling chief held in the highest regard by every European and Indian who knows him, has been accepted by the Government for the Indian force. I feel sure that all England trusts that this money will be spent, not in relieving the Government of any charges which it ought itself to bear, but in giving to the troops comforts and amenities that the State would not be justified in providing, and particularly that it may be used in ensuring that the wives and families of native officers and men may be spared any avoidable hardship and suffering owing to the absence of their dear ones in Europe.

---

### "THE VIVEKACHINTAMANI."

The September number of this Tamil monthly contains three interesting articles on the European War. The articles on "Earthquakes" will be read with great interest by most. One noteworthy feature about the journal is that the articles are all written in such clear and simple style that many can understand them without much difficulty. We are glad to note that the usefulness of the journal has been recognized by the Government who have ordered its supply to all the Government Schools and Educational Officers. We wish the journal every success.—*New India*, 25-9-14.

## The King's Message to Indian Troops.

Allahabad, Oct. 5.—The *Pioneer's* London Correspondent cabled on the 2nd October:—

The King has sent the following messages to the Indian troops:—"I look to all my Indian soldiers to uphold the *Izzat* of the British Raj against an aggressive and resultless enemy. I know with what reedin ss my brave loyal Indian soldiers prepared to fulfil this sacred trust shoulder to shoulder with their comrades from all parts of the Empire. Rest assured that yon will always be in my thoughts and prayers. I bid you go forward and add fresh lustre to the glorious achievements and noble traditions of courage and chivalry of my Indian Army whose honour and fame is in your hands."

### To the British Indian Troops.

"I KNOW YOUR DUTY WILL BE NOBLY DONE."

The King has also sent a message to the British troops from India, in which he says:—"I have implicit confidence in my soldiers. Duty is your watchword, and I know your duty will be nobly done."

---

### THE "VIVEKACHINTAMANI."

This popular Tamil Magazine for September devotes itself to pointing the moral of the present conflagration of the European War. There is a brief and glowing account of the Belgians and their brave King under the head "Brave King of a brave people." Then comes the Poet-Laureate's war song which is rendered into excellent Tamil and printed in parallel columns. H. E. Lord Hardinge's appeal *re* the Imperial War Relief Fund is fully given in Tamil. The essay on "Friendship" is excellent and is an illustration of the way in which great subjects can be treated in a simple and lucid way. The biographical sketch of Miss Florence Nightingale is most appropriately dealt with in its application to the requirements of the present situation. It has two illustrations—one of Miss Nightingale herself, and another of the Hospital at Scutari. The Tamil Ode on "National Self Respect or In Praise of British Character" is good and refers to the salient features of the British national character.—*The Hindu*, 29th September 1914.

புஸ்தகம்-22.] [சஞ்சிகை-7.
"The Children's Favourite, The Teachers' Help, And the Parent's Guide."

ஆனந்தவூ ஐப்பசிமீ } விவேகசிந்தாமணி { October-November 1914.



ESTABLISHED 1892

"பெற்றோர்கள் தாழவப்பர் பிள்ளைகளில் ஞூத்தையுநீறோர்
கற்றே மேனவுகந்து கற்பர் பின்னும்—மற்றோர்கள்
மாச்சரியத் தாலிகழில் வந்ததென்னேத் சேயிகழ்கை
யாச்சரிய மோதா னவர்க்கு."

☞ In reply to several inquiries addressed to us we beg to state that the Government have approved of the recommendations of the Director of Public Instruction (R.O.C. No. 8043/13) and declared the *Vivekachintamani* as "suitable for use in Elementary Schools" and ordered its supply to all the Government schools and Educational officers. The Editor requests that Officers and Heads of Institutions receiving the *Vivekachintamani* will be pleased to recommend its supply to all the Elementary and Lower Secondary schools under their supervision. Indents for copies of the journal will be supplied by the Managing Agents of the *Vivekachintamani* from the beginning of the current Volume, which coincides with the official year.

## THE PROGRESS OF WAR.

### யுத்தப் போக்கு.

யுத்தப் போக்கிலும் சுத்தப் போக்குண்டு. அப்படியென்றால் யுத்தம் நடத்துவதிலும் சுத்த மனத்தோடு யுத்தம் நடத்துகிற வழி யுண்டு. அதாவது, சண்டை செய்யும் இரு தரத்தாரும் சரிசமமாக நின்று யுத்தம் செய்து யார் ஜயிக்கிறார்களென்று பார்ப்பதாம். செத்த பாம்பை அடிப்பதில் வீரத்துவம் ஒன்றுமில்லை. நிராயுத பாணியை ஆயுதவீரன் கொல்லுவது கொலைபாதகமேயன்றி அது யுத்தநீதியாகாது. மஹாபாரதம் பீஷ்ம பருவத்தில் யுத்த நீதி யின்னதென்று சொல்லியிருக்கிறது. ரத, கஜ, துரக, பதாதி யென்னும் சைனியப் படைகளில், அவரவர் தத்தமக்குச் சரிசமமான வாஹனம் ஆயுதம் தரித்தவர்களோடு எதிர்த்துச் சண்டை செய்யல்வேண்டும். குதிரைவீரன் காலாட்படை வீரனைத்தாக்குவது யுத்ததர்மமல்லவென்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் இக்கலிகாலத்தில் நடக்கும் சண்டையில் "வல்லான் வகுத்தது வாய்க்கால்" என்பது எப்போதும்போல உண்மையாக விருந்தாலும், "ஸர்வ வல்லமையுள்ள கடவுள் ஒருவர் இருக்கிறார்: அவருடைய தர்மம் எப்படியும் தலையெடுக்கும்" என்கிற நம்பிக்கை குறைவாயிருக்கிறது.

கொள்ளை யிடுவதும், கொலை புரிவதும், தீயிட்டுச் சொத்தை யழித்தலும் யுத்தநீதியில் சேர்ந்தவையல்ல, சண்டைக்காலத்தில் இந்த அக்கிரமம் செய்கிறவர்களை உடனே கண்டிக்க அரசுக் கதிகாரமின்றிப் போனாலும், தெய்வத்தின் சக்தி குறைந்து போகவில்லை. "அரசன் அன்று கொல்லும்" என்பது தவறினாலும் "தெய்வம் நின்று கொல்லும்" என்பது ஒருபோதும் தவறாது. அநீத அக்கிரமங்களெல்லாம் அற்ப வாழ்வுடையன. இவையெல்லாம் கொஞ்ச காலத்துக்குத்தான் செல்லும். பிறகு கர்ம தர்மத்தின்படி "விதைத்தான் வினையறுத்தான்" என்றபடி தர்மவிரோதமான காரியம் செய்கிறவர்கள் அதன்பலனை அனுபவிக்காமற் போகார்கள். தர்மத்தைக் காக்க ஒருவர் இருக்கிறார். அவர்தான் கடவுள். "எல்லாம் கடந்து உள்ளவர்" ஆதலால் அவருக்கு அந்தப் பெயர் சித்திக்கலாயிற்று. "அதர்மம் தலையெடுத்து தர்மம் தலைதாழ்ந்தபொழுது நான் அவதாரமாகி தர்மம் தலை யெடுக்கச் செய்கிறேன்" என்று பகவான் சொன்னது அன்றைக்கும் இன்றைக்கும் என்றைக்கும் மெய்யே.

இப்பொழுது ஐரோப்பாவில் நடக்கும் யுத்தப் போக்கை நடுவுநிலைதவறாது நின்று பார்ப்பவர்களுக்கு அதன் உண்மை விளங்கும். ஜெர்மானியர் ஏதோ தாம் வலுத்தகையாக

விருக்கிறதுபற்றி எளிய ராஜ்யங்களைத் தா மிட்டது சட்டமாகக் கொண்டு நடக்கச்செய்ய லாமென்று நினைத்து வெகு பாரதூர யோசனை யோடு தங்கள்·கைவலியைக் காட்டி மற்ற ராஜ் யங்களை ஒடுங்கச் செய்யலாம்: தற்காலம் ஒடுங் கச் செய்ய முடியாத ராஜ்யங்களை இந்தப் போரில் தலையிட்டுக் கொள்ளாமல் ஒதுங்கி யிருக்கவாவது செய்யலாமென்று நினைத்தார் கள். "நாமொன்று நினைக்க தெய்வம் ஒன்று நினைக்கிறது" என்பதின் உண்மையை அவர்கள் அப்பொழுது உணராவிட்டாலும், ஆரம்ப சூரத்துவமாய்க் கிளம்பி நாடு நகரங்களையெல் லாம் அழித்துக்கொண்டு பாரிஸ் நகரக் கோட் டைகள் தென்படுகிறவரையில் சென்று பின் னர் எதிர்த்து மறுத்துத் திருப்பி யடிக்கப் பட்டு வருகிற தற்பொழுது உணர்த்த உணர் வாரா யிருக்கிறார்கள்.

வெள்ளம் மடை திறந்தவாறு படையெடுத் துச் சென்றவர்கள் அணைகோலி யடைத்துக் கரை துறைக்குட்படக் கட்டிய நீர்போல் இப் பொழுது தங்கள் தேசத்தின் எல்லையை நோக்கிப் பின்வாங்கி வருகிறார்கள். பாரிஸ் நகரில் 'ஸீன்' நதியோடு சங்கமமாகும் அதன் உபநதிகள் பலவுள. அவைகளிற் சில : வடக் கே (1) ஆய்ஸ் (Oise); இந்நதி தீரத்திலுள்ள ஜில்லாவுக்கும் அதே பேர்தான். வடகிழக்கே (2) எய்ஸ்நி (Aisne); இந்நதிக்கரையிலுள்ள ஜில்லாவுக்கும் அதே பேர்தான். இங்கே பிரமா த்மான சண்டை நடந்துவருகிறது, கிழக்கே (3) மார்ன் (Marne); இந்நதிக்கரையிலுள்ள ஜில்லா அல்லது மாகாணத்துக்கு [ப்ரெஞ்சில் இதற்கு டிபார்ட்மெண்ட் (பிரிவு) என்று பேர்] அதே பேர்தான். மார்ன் ஜில்லாவுக்கும் பா ரிஸ் நகருக்கும் இடையில் "ஸீன்-எட்-மார்ன்" (Seine et Marne) என்கிற மாகாணப் பிரி விருக்கிறது. அப்படியென்றால் "ஸீன்-மார்ன் நதிதீரம்" என்று அர்த்தம் கொள்ளும். மார்ன் மாகாணத்துக்குத் தெற்கே (3) ஆப் (Aube) நதியும் அதே பேருடைய மாகாண மும் இருக்கிறது. ஆப்-க்குத் தென்மேற்கே (5) யோன் (Yonne) என்கிற உபநதியும் அதே பேருடைய மாகாணமுமிருக்கிறது. யோன்-க்கு மேற்கே லாய்ர் என்கிற மற்றொரு நதியும் அந்நதிக்கரையிலுள்ள 'லாய்ரேட்' என் கிற மாகாணமுமிருக்கிறது. இதற்கு நேர் வடக்கே ஸீன்-எட்-ஆய்ஸ் (Seine et Oise) என்கிற மாகாணமிருக்கிறது. இதிலே தான் பாரிஸ் நகர் இருக்கிறது. இப்பொழுது நாம் பாரிஸ் நகரிலிருந்து வடபுறமாகப் புறப்பட்டு அதை ப்ரதக்ஷணமாகச் சுற்றிக்கொண்டிருக் கும் நதிகள், நதிதீரங்களைப் பார்த்துக் கொண்டு தெற்கு வழியாக மறுபடியும் பாரிஸ் நகருக்கே வந்துவிட்டோம்.

ஸீன் நதிக்கு வடகிழக்கே ஸோம் (Somme) நதியும் அந்நதி தீரமாகிய அதே பேருள்ள மா காணமும் இருக்கிறதென்றும் முன் பத்ரிகை களில் எழுதிய சமாசாரங்களைக் கருத்துடன் படமும் கையுமாய் வாசித்தவர்களுக்குத் தெரி யும். அந்த ஸோம் நதிக்கரையில்உள்ள அமீன்ஸ் பட்டணம் ஜெர்மானியரால் பிடிக்கப்பட்டு, இப்பொழுது மறுபடியும் ப்ரெஞ்சு-இங்கிலீஷ் சைனியங்களால் பிடித்துக்கொள்ளப்பட்டிருக் கிறது. ஜெர்மானியர்கள் ஸோம் நதிதீரத் தைப் பிடித்துக்கொண்டு அதற்குத் தெற்கே யுள்ள ஆய்ஸ் நதிதீரத்துக்குச் சென்று அங்கே யுள்ள (Noyon) நோயன், காம்பீன் (Compiegne), ஸென்லிஸ் (Senlis) இப்பட்டணங் களைப் பிடித்துக்கொண்டு பாரிஸ் நகருக்கு 20 மைல் தூரம் (அரைநாட் பயணம்) வரையில் சென்றனர். பிறகு அங்கிருந்து எதிர்த்துத் தாக்கி ஒன்றுவிட் டொன்றாகத் திருப்பி யோடும்படி துரத்தப்பட்டிருக்கிறார்கள்.

எய்ஸ்நி மாகாணத்தில் அந்நதிக்கரையி லுள்ள ஸாய்ஸான்ஸ் (Soisons) பட்டணத்தி லும் அந்நதித் தீரமாகிய மாகாணத்திலுள்ள லேயான், ஸெய்ன்ட்குவென்டின், கைஸ், ஹிர்ஸன் பட்டணங்களிலும் ஸெப்டம்பர்மீ பின் பாதியில் சண்டைகள் நடந்துவந்தன.

சண்டையில் முக்கியமான மெஸியர்ஸ் (Meziers) என்கிற பட்டணம் எய்ஸ்நிக்கு

அடுத்த கிழக்கேயுள்ள ஆர்டென்ஸ் (Ardennes) மாகாணத்திலிருக்கிறது. ஆர்டென்ஸ் என்பது ஒரு மலைத் தொடரின் பேர். இது ப்ரான்ஸ், பெல்ஜியம் இரண்டுக்கும் இடையே இருக்கிறது. இந்த மலைப் பாதையாக ப்ரான்ஸுக்குள் நுழைவதற்கு பெல்ஜியத்தைத் தாண்டித்தான் வரவேண்டும். பெல்ஜியத்தைத் தாண்டிச் செல்லவேண்டி சண்டையிற் சேராத அத்தேசத்தின் எல்லையுட் பிரவேசித்ததினால் தான் ஆங்கிலேயர் இந்தயுத்தத்தில் தலையிட்டுக் கொள்ள வேண்டிய நிமித்தம் ஏற்பட்டது. இந்த மெஸியர்ஸ் பட்டணம் மியூஸ் நதிக் கரையிலிருக்கிறது.

1870-ம் வருஷத்தில் நடந்த ஸெடான் (Battle of Sedan) சண்டைக்களம் மியூஸ் நதிக்கரையில் தானே 'மெஸியர்ஸ்' பட்டணத்துக்குச் சிறிது தென்கிழக்கே யிருக்கிறது. அதற்குத்தெற்கே மியூஸ் நதி தீரமாகிய அதே பேருள்ள மாகாணம் இருக்கிறது. இதிலே வெர்டன் (Verdun) என்கிற எல்லைப்புரத்து அரண்செய்த பட்டணம் இருக்கிறது. இதுவும் மியூஸ் நதிக்கரையிலேதா னிருக்கிறது. இதற்குத் தென்கிழக்கே மியூர்தி-எட்-மூஸெல் (Meurthe et Moselle) என்கிற நதிதீர்மாகிய மாகாணமிருக்கிறது. அதிலேதான் இச்சண்டையில் பேர்போன 'நான்ஸி' (Nancy) என்னும் அரண் செய்யப் பெற்ற எல்லைக் கோட்டை யிருக்கிறது. இந்த மாகாணத்துக்கு நேர் தெற்கே 'வாஸ்ஜெஸ்' (Vosges) மலைப்ரதேசமாகாணமும் அதில் எபிநேப் (Epinai), ஸெய்ன்ட் டை' (St. Die) என்கிற அரண் செய்யப்பட்ட ஸ்தலங்களும் இருக்கின்றன. வாஸ்ஜெஸ் மலைத் தொடர் ஆதியில் ப்ரான்ஸ் தேசத்துக்குட்பட்டதா யிருந்தது. 1870-71-ம் வருஷத்துக் சண்டையில் ப்ரான்ஸ் தோல்வி யடைந்து அவர்களுக்குச் சொந்தமான ஆல்ஸேஸ், லாரெய்ன் (Alsace & Lorraine) மாகாணங்களின் கீழ் பாதியை ஜெர்மனிக்குக் கொடுத்துவிடும்படி நேரிட்ட பின் இந்த வாஸ்ஜஸ் மலைத் தொடர் ஜெர்மனிக்கும் ப்ரான்ஸுக்கும் இடையிலுள்ள எல்லை ஸ்தானமாகக் கொள்ளப்பட்டது மஹாலபபக்ஷக் கடைசியான ஸெப்டெம்பர் மூன்றாவது வாரத்தில் இங்கேதான் சண்டை நடந்துகொண்டிருந்ததாகத் தெரியவந்தது. மார்ன் நதிக்கரையில் அஃதோடு ஆர்நெய்ன் (R.Ornaine) என்னும் உப நதி சங்கம ஸ்தானத்திலிருக்கும் விட்ரி(Vitry) பட்டணத்தை விட்டு ஜெர்மன் சைனியங்கள் திரும்பிப் போகும்படி அடித்துத் துரத்தப் பட்டதாக தந்தி சமாசாரம். ஸெப்டம்பர்மீ 16உயிலிருந்து ஜெர்மனியின் சைனியம், நோயன்ஸ் (Noyons) தொடங்கி லேயான் (Laon) கோட்டைக்கு வடக்கு வழியாக (Argone) ஆர்கானைத்தாண்டி வெர்டன் (Verdun) கோட்டைக்கு வடக்குவளாயில் ஓடிநின்று எதிர்த்துச் சண்டை போட்டு வருகிறதாகத் தெரிகிறது. ஸெப்டம்பர்மீ முதல்வாரக் கடைசியிலும் இரண்டாவது வாரத்திலும் நடந்த மார்ன் சண்டையில் (Battle of the Marne) ஜெர்மன் சைனியம் தோற்றுப்போனதாக சமாசாரம். அச்சண்டைக்குப் பின் மார்ன் நதியை விட்டுப் பின்வாங்கி யிருக்கிறார்கள்.

ஸெப்டெம்பர் 10-12-ந் தேதிகளில் வெங்காளக் குடாக் கடலில் எம்டன் (Emden) என்னும் ஜர்மனி சண்டைக் கப்பல் புகுந்து நாலைந்து வியாபாரக் கப்பல்களைப் பிடித்து உடைத்து முழுக அடித்துவிட்டு அதிலிருந்த பேர்களை 'காபிங்கா,' என்னும் ஒரு கப்பலில் ஏற்றி கல்கத்தா துறைமுகத்துக்கு 78-மைல் தூரம் வரையில் கொண்டுவந்து விட்டுவிட்டுத் திரும்பிப் போய்விட்டது. இதே கப்பல் சென்னைப்பக்கம் வந்து ஸெப்டம்பர்மீ 22உ இராத்திரி நகரில் குண்டுபாய வெடிதீர்த்துச் சிலருக்கு உயிர்ச்சேதமும் பலருக்குக் காயமும் எல்லாருக்கும் மனதில் கலக்கமும உண்டாகச் செய்துவிட்டுப் போய்விட்டது. 26, 27-ந் தேதியில் மலையாளத்துக் கப்பாலுள்ள லக்ஷத் தீவுகளுக்கு அருகில் 4-கப்பல்களைப் பிடித்து உடைத்துவிட்டு நிலக்கரி யேற்றிவந்த ஒருஸர்க்கார்கப்பலையும் பிடித்துக்கொண்டு போய்விட்டது. யாருக்கும் உயிர்ச்சேதமில்லை. இந்தக் கப்பலைப் பிடிக்க மூன்று கப்பல்கள் துரத்திக் கொண்டு போகிறதாகச் சமாசாரம்.

## LULLABIES AS FIRST AID TO CHILD - EDUCATION.

### Gleanings from the Ancient Indian Methods of Kindergarten.

### பாலபோத சிக்ஷா சாதனம்.

### சிறு குழந்தைகளுக்குச் சொல்லும் தாலாட்டுப் பாட்டுகள்.

இந்நாட்டில் குழந்தைகளைத் தொட்டிலில் போட்டு தூங்கச் செய்யும்பொழுது அவர்களை சீக்கிரமாய்த் தூங்கப் பண்ணும்பொருட்டும், அல்லது அழுதுகொண்டிருந்தால் அந்த அழுகையை அடக்கும்பொருட்டும் தாய்மார்களும் செவிலித்தாய்களும் அத்தை பாட்டிமுதலிய மற்றோர்களும் தாலாட்டல் என்ற பாட்டுக்களை எடுத்து "நீலாம்பரி" என்கிற இராகத்தில்பாடுவது வழக்கம். இந்தப்பாட்டுகள் வெகு அருத்தத்தோடு கூடினவாயும் கடவுள்பெருமை முதலியவைகளை எடுத்துக் காட்டுகிறவைகளாயும் இருக்கும். அவற்றுள் சிலவற்றை நாம் இந்த சஞ்சிகையில் எடுத்துக் கூறுவோம்.

1. ஆறிரண்டும் காவேரி
அதன்நடுவே ஸ்ரீரங்கம்
சுவாமி இரண்டு கையினாலே
தந்த என்தன் திரவியமோ.

இதன் அருத்தம்:—இந்தக்குழந்தை காவேரிக்கும் கொள்ளிடத்திற்கும் மத்தியிலிருக்கிற விஷ்ணு க்ஷேத்திரமாகிய ஸ்ரீரங்கத்தில் வீற்றிருக்கும் ஸ்ரீரங்கநாதருடைய திரு அருளால் பெற்றபாக்கியம் என்றபடி.

2. பச்சை இலுப்பைவெட்டி
பால்வடியத் தொட்டிலிட்டு
தொட்டிலிட்ட அம்மானே
நீபட்டினியாப் போகாதே.

இதன் அருத்தம்:--பசுமையாகிய இலுப்பை மரத்தைவெட்டி அதிலிருந்து பால் வடிந்துக்கொண்டிருக்கும்பொழுதே அவசரம் அவசரமாய் குழந்தைக்குத் தொட்டிலைப்பண்ணி அதில் குழந்தையைப் படுக்கச்செய்த மாமாவே, நீர் இதற்குத் தகுந்தபடி விருந்து போஜனம் உண்டு போவீராக! பட்டினியாய்ப் போகலாகாது என்றபடி, நமது நாட்டில் அம்மான் தொட்டிலிடும் வழக்கத்தையும் அதற்குப்பதிலாக அவருக்கு ஓர்விருந்து அளிக்கும் வழக்கத்தையும் இந்தப்பாட்டு எடுத்துரைக்கிறது.

3. ஆராரோ, ஆராரோ
என்னரசே, ஆராரோ
சீராரும் எங்கள் குல
தீபமே நீ, ஆராரோ.

இதன்கருத்து:--என்னை ரக்ஷிக்கவந்த குழந்தையே, எங்கள் குலத்தை தீபம்போல் விளங்க வைக்கும் கண்மணியே, பூர்வஜன்மங்களில் நீ யார், நான் யாரோ [இந்த ஜன்மத்தில் அன்னையும் பிள்ளையுமாக வந்து தோன்றியிருக்கிறோம்,] நீ கண்வளராய் என்றபடி.

4. கங்கைபுனை ஸ்ரீ நாதன்
கருணையினால் என்வயிற்றில்
மங்களமாய் வந்துதித்த
மணியே நீ கண்வளராய்.

இதன்கருத்து:—'கங்காதேவியைத் தலையில் தரித்துக்கொண்டிருக்கிற ஸ்ரீ சிவபெருமானுடைய திருவுளத்தால் எனக்கு க்ஷேமத்தையுண்டாக்கும்பொருட்டு என் வயிற்றில் அவதரித்த குழந்தையே, நீ தூங்குவாயாக என்றபடி.

5. பாலே பழரசமே
பகாலண்ணுத் தெள்ளமுதே
மேலேவிண் ணோர்மகிழும்
வித்தேநீ கண்வளராய்.

இதன்கருத்து:--'தனது குழந்தையை மகிழ்ந்து "என்க்ஷீரமே, நல்ல ஜாதிப்பழங்களின் இரசமே, வருணிக்கமுடியாத தெளிந்த அமிர்தமே, எல்லாவித ஆநந்தத்துக்கும் மேலான ஆநந்தமே, தேவர்கள் ஆநந்தப்படும் என் குழந்தையே, நீநித்திரைசெய்வாயாகஎன்றபடி. "அன்பே யருளே, அழியாமுதலே, இன்பரஸமே இசையுட்சுவையே" என்றா பிறரும்.

6. வேதமனு நூற்கலைகள்
விளங்கிவரும் இந்நாட்டில்
கீதமொழி கேட்கவந்த
பைங்கிளியே துயில் கொள்வாய்.

இதன்கருத்து:—'வேதங்கள், மானவதர்ம சாஸ்திரங்கள் முதலிய நூல்கள் விளங்கிவரும் இந்த புண்யபூமியில் அவதரித்து பகவத்கீதை கேட்டு கிருதகிருத்தியனாக வந்த' பைங்கிளியொத்த பாலனே, நீ உறங்குவாயாக என்றபடி.

7. வண்ணமணித் தொட்டிலிலே
வாய்த்த செம்பொற் கட்டிலிலே
கண்ணே என்கண்மணியே
கற்பகமே நித்திரைசெய்.

இதன்கருத்து:—'என் குழந்தாய், நல்ல வர்ணம் இழைத்த மணிகள்கட்டிய தொட்டிலில் அமைக்கப்பட்டிருக்கும் சிரேஷ்டமான பொன்னாற் செய்தகட்டிலில் என் மனோரதங்களையெல்லாம் ஈன்ற கற்பகத்தருவாகிய நீ கண் துஞ்சுவாயாக' என்றபடி.

8. தண்டைமணி சத்தமாட
தாய்மார்கள் முத்தமிட
தொண்டையுடன் வாய்மூடி
துரைமகனே கண்ணமர்வாய்.

இதன்கருத்து:—'இதுவரையில் உன்காலில் அணிந்த தண்டையின் மணிகள் சத்தமிட்டது கேட்டு நாங்கள் எல்லோரும் உன்னை முத்தமிட்டுக் கொஞ்சினதுபோதும். இனி நீ உன் வாயையும் தொண்டையையும் கொஞ்சம் மூடித்தூங்குவாயாக.

9. அத்தைமனம் நோகாமல்
உன் அண்ணன்மனம் வேகாமல்
சித்தமதில் தயைகொண்டு
சிகாமணியே கண்ணுறங்காய்.

இதன்கருத்து:-'குழந்தை அழும்பொழுது அத்தையின் மனம் கொஞ்சம் நொந்தும் அண்ணன்மனம் கொஞ்சம் வருத்தப்பட்டும் இருக்குமாகையால் அப்படி இல்லாமலிருக்கும்படி நீ தயைகூர்ந்து கண் வளருவாய்' என்றபடி.

10. தாய்மார்கள் வைதாரோ
தாதியர்என் செய்தாரோ
வாய்திறந்து சொல்லியெங்கள்
மன்னவனே கண் அடைவாய்.

இதன்கருத்து:—'என்னை ஆளப்பிறந்த குழந்தாய்! ஏன் அழுகிறாய்? உன்னை யார் என்ன செய்தார்கள்? அவர்கள் பேரைச் சொல்லி உன் துக்கத்தை நீக்கித் தூங்குவாயாக' என்றபடி.

11. அத்தை அடித்தாளோ
அக்காள்தான் அடித்தாளோ
முத்தான வாய்திறந்து
மொழிந்துறங்காய் கண்மணியே.

இதன்கருத்தும்:—முன்பாட்டின் கருத்தேதான்.

12. தங்கத்தால் யானைகளும்
தந்தத்தால் சேனைகளும்
அந்தமாக நான்கொடுப்பேன்
புத்திரனே கண்வளராய்.

இதன்கருத்து:—புத் என்னும் நரகத்தில் விழாமல் என்னை ரக்ஷிக்கவந்தவதரித்த குழந்தையே! நான் உனக்கு விளையாடுவதற்காக தங்கத்தால் செய்யப்பட்ட யானைகளும் தந்தத்தால் செய்யப்பட்ட குதிரை கால்வீரர்முதலான சேனைகளும் நீ தூங்கியெழுந்திருக்கும் பொழுது அழகாகவைத்து விளையாடும்பொருட்டு அன்போடு தருவேன். நீ இப்பொழுது நித்திரை செய்' என்றபடி.

13. பொற்சரிகை வஸ்திரமும்
போற்றுபல சித்திரமும்
நற்சரிகை அங்கியுமே
நான்தருவேன் நித்திரைசெய்.

இதன்கருத்து:—மிகவும் சுலபம். 'நான் உனக்கு பொன் சரிகைபோட்ட வஸ்திரமும் பலர்புகழும் அழகுநிறைந்த சித்திரங்கள் பலவும் நல்ல சரிகையால் செய்யப்பட்ட சட்டையும் கொடுப்பேன். நீ இப்பொழுது கண்வளராய்!' என்றபடி.

14. பஞ்சவர்ணக் கிளிகொஞ்ச
பாடும்குயில் ஓசைமிஞ்ச
எஞ்சலில்லாப் பஞ்சணைமேல்
என்மகனே கண்வளராய்.

இதன் கருத்து:—'நாலுபக்கமும் பஞ்சவர்ணக்கிளிகள் கொஞ்சிப்பேச, இன்னிசையோடு பாடும் குயில்களின் ஓசை மிகுந்தொலிக்க மாசற்ற பஞ்சு மெத்தையின்மேல் என்மகனே நீ நித்திரை செய்வாயாக!' பஞ்சவர்ணக்கிளி கொஞ்சிப்பேசுதல் அருளொளி நிறைவுக்கும் 'பாடும் குயில் ஓசை' நாதகீத நல்லிசைக்கும் உருவக உவமானம். 'அருள்வெளியில் 'நாத வடிவான' உன்தாயின் இன்னிசைக் குரல் கேட்க நீ இவ்வுலக வாசனையற்று அறிதுயில் அமர்ந்து நித்திரை செய்வாயாக' என்றபடி.

15. தந்தையொரு பக்கம்நிற்க
தாயுமொரு பக்கம்நிற்கச்
சிந்தைமகிழ் விற்பார்க்கும்
தெருட்கடலே நித்திரைசெய்.

இதன் அருத்தம்:—தொட்டிலின் ஒரு பக்கத்தில் தகப்பனும் மற்றொரு பக்கத்தில் தாயும் நின்றுகொண்டு ஆனந்தக்களிப்பு அடையச்செய்த தெள்ளமுதப்பெருக்காம் அருட்செல்வமே நீ தூங்குவாயாக. [தந்தை யொரு பக்கம் தாய் ஒருபக்கம்நிற்கப் பாட்டியார் குழந்தையைத் தொட்டெடுத்து நாமகரணம் சூட்டி (பேரிட்டு) தரையில்படாமல் (உலக வாஸனை யென்கிற ஸம்ஸாரதுக்கம் தாக்காமல்) அந்தரத்தில் நடராஜாவைப்போல் ஆடிவர இடும் ஊஞ்சல் சாதனம் "தொட்டில்."] அருட்செல்வமான குழந்தையைப்பெற்று அது ஸம்ஸார துக்கத்திலுழன்று நொந்து மனம் புண்ணாகாதபடி தாமரையிலைத் தண்ணீர்போல் இவ்வுலகவாழ்க்கையில் ஒட்டியும் ஒட்டாமல் சுகவாழ்வு எய்தி வருகவென்று பாட்டியார் ஆசீர்வதித்துத் தொட்டிலில் இட, தாயார் தகப்பனர் அந்த வைபவத்தை ஆனந்தக்களிப்போடு பார்த்துக்கொண்டு தொட்டிலின் இருபக்கத்திலும் நிற்க தெளிந்த அமுதம் நிறைந்த கடல்போலும் எல்லாருக்கும் மனக்களிப்பையூட்ட வந்தசெல்வமே நீ அறிதுயில்கொண்டு ஆனந்திப்பாய்—என்றபடி.

16. சரியாய் தவம்தானம்
தருமங்கள் செய்தஎங்கள்
கலிதீர்க்க வந்துதித்த
காதலனே கண்வளராய்.

இதன் பொருள்:—நாங்கள் பிள்ளையில்லாக் குறைதீர அனேக தானதர்மங்கள் செய்து கடைசியாய் அவைகளின் பலனைக்கண்டெடுத்த எங்கள் அன்புக் குறைவிடமான புதல்வனே நீ தூங்குவாயாக. 'பிள்ளை மிடி தீர்க்க வந்த'புத்திரனைகையால் அப்படிப்பட்டஸத்புத்திரன் இந்திரிய நிக்ரஹமாகிய தவமும், 'ஈவதறம்' என்றபடி ஸத்பாத்திர மறிந்துகொடுக்கும் சரியானதானமும் ஆகிய பஹிர்-அஹமுக சாதனங்களின்றிப் பிறக்கமாட்டான். அஸத்துக்களான பிள்ளைகள் ஆயிரம்பேரைப் பெறுவதிலும் ஸத்புத்திரன் ஒருவனேயானாலும் அவனைப் பெறுதலே மேல். ஏனெனில் அவனால் உலகத்தில் தர்மம் தழைப்பதன்றி பெற்றோர்களுக்கும் இகபரமிரண்டிலும் சுகமுண்டு: பிள்ளையில்லாக்குறை தீர்க்கவந்த புத்திரன் அவர்கள் அன்புக் குறைவிடமாயிருத்தலால் 'காதலனே' யென்றுவிளித்து அறிதுயிலமர்ந்து ஆனந்திப்பாய்! என்று சொன்னபடி. "காதலிருவர் கருத்தொருமித்தாதரவுப்பட்டதேயின்பம்" என்றார் ஔவையார். அப்படிப்பட்ட இன்பம் நுகர்ந்தகாலையில் அவர்களுடைய அன்புதானே உருவெடுத்ததுபோலும் மைந்தன் உதித்தானாதலால் அவன் "காதலன்" ஆனான்.

17. இளையோ ருடன்தெருவில்
இன்பமாய்த் தேருருட்டி
விளையாடி வந்துநின்ற
வேலவனே நீ துயிலாய்.

இதன் பொருள்:—தன்னொத்த சிறுவர்களுடன் தேர், சப்பரம் முதலானவைகட்டி தெருவில் அவையோடும்படி உருட்டி விளையாடி தேஹமயர்ந்தபோது களைப்பாறவேண்டி அம்

மையைநினைத்து அஹந்தேடிவந்த வேலாயுதம் தரித்த குமாரதேவனொத்த பாலகனே நீ கண் துஞ்சுவாய்.

[இத்தாலாட்டுப்பாட்டினால் சிறுகுழந்தைகளின் வித்தியாபோதம் எப்படி நடந்து வந்ததென்று தெளிவாய்த் தெரிகிறதல்லவா. இப்பொழுது மந்தையில் மாடு மறிப்பதுபோல் சிறு குழந்தைகளைப் பள்ளிக்கூடங்களில் மறிக்கப்போட்டு ஜாமநேரம் அவர்கள் மனப்பாடம் செய்யும்படி சித்ரவதைசெய்து வீட்டுக்கனுப்புகிறார்கள். முன்காலத்தில் இருடிகளும் முனிவர்களும் நிறைந்த இத்தேசத்தில் குழந்தைகள் எப்படி வளர்க்கப்பட்டு வந்தார்களென்று இத்தாலாட்டுப்பாட்டு நன்றாகச் சூசிப்பிக்கிறது. தொட்டிலிற் படுத்துத் தூங்கும் குழந்தைகளுக்கும் குரும்பைகள் முதலான சாதனங்கள்கொண்டு தேர், சப்பரம், வண்டி, இரதம் முதலானவை கட்டத்தெரியும். அவர்கள் தன்னொத்த பிள்ளைகளோடு தெருவில் "தேருருட்டி" விளையாடிவிட்டு, அயர்ந்த காலையில் தாயாரண்டை வந்து ஸ்தந்யபான முண்டு களை நீங்கி, அன்னை அவர்கள் வாய்மடுக்க இன்னமுதூட்டியவாறே, செவி மடுக்கச் சொல்லமுதூட்டி அன்புநிறைந்த இனிய குரலால் அறிவுநிறைந்த வார்த்தைகளைக்கூட்டி தாலாட்டுப்பாட அதைக் கேட்டுக்கொண்டே அவர்கள் நித்திரைபோனார்கள். குழந்தைகளுக்குப் பாலபோதம் செய்யும்வகை இதுவல்லவோ சரி! இப்பொழுது பிரதம பாடசாலைகளில் பாலபோதம் செய்யும் முறையையும் தாயின்பால் பாலமுதுண்டதோடு ஞானமுதும் கூடவுண்டு வளர்ந்த ஞானசம்பந்தமூர்த்திகளான இத்தேசத்துப் பூர்வகுழந்தைகளுக்கு விவேகத்தாய் பாலபோத மியற்றி வந்த முறையையும் சிந்தித்துப்பார்க்க இக்காலத்து நம்மவர்களுக்கு வெட்கமும் துக்கமும்வந்து மூண்டுகொண்டு அவர்களுக்குப் புத்தி வரச்செய்ய வேண்டாமா! இதுநிற்க. பூர்வத்தில் தாய்மார்கள் இப்படியிருக்க தகப்பன்மார் சிறப்பைச்சொல்லக் கேட்போம்.]

18. மதுரையிலே குதிரை கட்டி
மாந்தோப்பு விடுதிவிட்டு
சடுதியிலே வந்திறங்கும் [குறங்கு.
என்செல்வன்மகன் பால்குடமேயுறங்

இதன்பொருள்:—அப்பா நீ என்னையாண்ட செல்வன் மகன். அந்தச் செல்வனும் யார்? உன் தகப்பனாரே! அவர் மதுரைப் பட்டணத்திலே வசித்துக்கொண்டு அங்கேயிருந்து குதிரை கட்டிக்கொண்டு போய் மாந்தோப்பு முதலான தோப்புத் துறவுகளைச் சுற்றிப் பார்த்துக்கொண்டு அங்கேயுள்ள விடுதியில் கச்சேரி வைத்து உலக வியவகாரங்களை யெல்லாம் சரிவரச் செய்து முடித்துவிட்டுக் காரியமானவுடனே மாந்தோப்பு விடுதிவிட்டுச் சடுதியிலே (ஒரு நிமிஷ நேரத்தில் குதிரை போட்டுக்கொண்டு வேகமாய் சவாரி செய்து வந்து) வீடுவந்திறங்குவார். அப்படிப்பட்ட என் காதற் செல்வன் மகனாகிய நீ "பால்குடமே" அமுத கலசம்போல் எல்லா மிடியும்தீர்க்க வல்ல பாக்கியமென்பதிற் சந்தேகமில்லை. அப்படிப்பட்ட என் குழந்தாய் நீ களைதீற ஆலிலையிற் பள்ளிகொண்ட அற்புதக் குழந்தைபோல் அறிதுயிலமர்ந்து எழுந்திருப்பாயாக-நீ அழுதால் நான் சகிப்பேனோ-என்றபடி. உனக்கு வீட்டில் ஒரு குறையுமில்லாதிருக்க, நீ யழுவானேன்? வெளியில் விளையாடுகையில் யாராவது உன்னைத் தொட்டு அடித்து உபத்திரவம் செய்திருக்கலாமோ என்று சிந்தித்துத் தாயார், சொல்கிறாள்:—

19. அடித்தாரைச் சொல்லியழு
ஆக்கினைகள் பண்ணிவைப்போம்.
தொட்டாரைச் சொல்லியழு
தண்டனைகள் பண்ணிவைப்போம்.

இதன்கருத்து:—வெகு சுலபம். அப்பா குழந்தாய்! நீ யேன் அழுகிறாய்? உன் குறையைச் சொல்லியழு! தெருவில் யாராவது உன்னை அடித்ததுண்டானால் அவர்கள் யாரென்று சொல்லியழு; அவர்களுக்குக் கண்டிப்பான ஆக்கினைகள் பண்ணிவைப்போம். உன்னை யாராவது தொட்டு உன் விளையாட்டைக்கலைத்து உபத்திரவம் செய்திருந்தாலும் அவர்கள் யாரென்று சொல்லியழு! அவர்களுக்கும் தக்க தண்டனைகள் செய்துவைப்போம். வீணாய் அழுது வருந்ாதே என் கண்ணே! நீ அறிதுயில் கொள்வாய்—என்றபடி.

இப்படிக்கு:
உங்கள் அன்புக்குரிய
நற்பாட்டி.

## The True Nature of the Present War.

### A War of Systems.

"The fact illustrates one of the strange complications of this war. It is not a people's war. It is a war of systems. We have our junkers and militarists as Prussia has. Let us take care that in destroying junkerism in Germany we do not put it in the saddle in England.

For we must remember that the real issue behind this struggle is something profounder than maps. They are only symbols. The real issue is independent of territorial boundaries and racial ambition. It is whether despotism founded on militarism and secret diplomacy and backed by the armaments' conspiracy is to be master of Europe or whether the democracy in all lands is to be free. It is whether modern civilisation or ancient barbarism, whether a society based on credit or a society based on powder barrel is to survive. We now know that civilisation and barbarism, credit and the powder barrel, militarism and freedom cannot co-exist in Europe. One or other must go. It is for the war and the settlement that follows the war to decide which it is to be. If the diplomatists make the settlement, the old system will survive and freedom will perish. The settlement must come from the people or there is no hope."—*Mr. A. G. Gardiner in the "Daily News and Leader."*

"யுத்தம் நடக்கு'து பார்! ஐயாவோ!
ரத்தம் வினையாலே தீவினை மேலிட்டுப்
பெத்தப் பெரியவோர் யுத்தம் நடக்கு'து!
செத்தபே * ரெல்லாம் சாகத்தெரியாதே
சுத்தமாம் பூமிக்குச் சுமையா விருந்ததால்
அத்தனை பேர்கள்செய் அக்ரமந் தாங்காதே
சித்தங் குழைந்தவள் துக்கந்தீர் பொருட்டாக
யுத்தம்ந டக்குது பார்! ஐயா!
கண்ணுள்ளோர் கண்டதன் குணத்தைக் கிரகிக்கட்டும்
கண்ணில்லார் மண்டையோடுடைந்தாலுங் காணாரே!"

—பரதேசிப்பாட்டு.

* Dead to the Power of Consciousness.

cf. "சித் இலாதபோது சீவன் இல்லையில்லை இல்லையே."

## ஸமஷ்டி வித்தை.

### தற்காலயுத்த ஸ்வபாவம்.

### "தொந்தப்போர்."

குழந்தைகளே! "தொந்தம்" என்றால் என்ன தெரியுமா? "துவம்-துவம்" என்கிற ஸம்ஸ்கிருத பதங்கள்சேர்ந்து தமிழில் "தொந்தம்" என்று திரிபுவிகாரமாய் வந்தபதம் அது. "துவம்" என்றால் "நீ" என்று அர்த்தம். தொந்தம் என்றால் "நீ, நீ" என்று நேருக்குநேர் முன்னிலையாக நிற்கும் எதிர்மறைப்பொருளுக்குப் பேர். அவைகளுக்கு உதாரணம்:—"நலம்-தீது"; "குணம்-கேடு" "உண்டு-இல்லை" இவை போன்றனவாம். இந்த உலகத்தில் கேவலம் சுத்தநன்மையும், கேவலம் சுத்ததீமையுங் கிடையாது. ஏனெனில் உலகமே போராட்ட சக்திகளால் உண்டாகி மத்திழுக்கிற மாதிரியாக அவை சன்னபின்னலாகச்சுற்றிவருவதால்நடைபெற்று வருகிறது. இந்த "தொந்தப்போர்" இயற்கையாயுள்ளது. நலமான பாகம் மலிந்து மேலிட்டபோது அதை உபசாரார்த்தமாய் நன்மையென்றும் தீதானபாகம் மலிந்து மேலிட்டபோது அதை உபசாரமாக தீமையென்றும் சொல்லுகிறது உலகவழக்கம். ஆகவே தீமையில்லாத நன்மையும், நன்மையில்லாத தீமையும் இவ்வுலகில் காணக் கிடைக்கமாட்டாது. அப்படியானால் இப்பொழுது நடக்கும் மஹாபாரத யுத்தத்தில் என்ன நலமிருக்கிறது என்று கேட்பீர்களே! ஆம், சொல்கிறேன் கேளுங்கள்.

"கிணற்றுத்தவளைக்கு நாட்டுவளப்பமேன்" என்று இருந்தவர்களெல்லாம், இப்பொழுது த்ரிஸந்தியாகாலமும் (காலை, மத்தியானம், ஸாயுங்காலம்) சண்டை எப்படி நடக்கிறது? ஜெர்மானியர் எங்கேயிருக்கிறார்கள்? ஆங்கிலேயசைனியம் எங்கேயிருக்கிறது? ப்ரெஞ்சு வீரர்கள் எங்கேயிருக்கிறார்கள்? 'எம்டன்' கப்பல் எங்கே என்ன செய்கிறது? என்று கேட்கிறார்கள், "மார்ன் நதிக்கரையில் சண்டை

நடந்தது. ஜெர்மானியர் தோற்றுப் பின் வாங்கி யிருக்கிறார்கள். இப்பொழுது எய்ஸ்நி நதிக்கரையிலும் ஆய்ஸ் நதிக்கரையிலும் சண்டை நடக்கிறது" என்று சொன்னால், சுவற்றில் மாட்டியிருக்கும் படத்தண்டை போய் நின்றுகொண்டு மார்ன் நதி எங்கேயிருக்கிறது? எய்ஸநி நதி எங்கே? பாரிஸ்நகர் எங்கே? ப்ரெஞ்சு எல்லை எங்கே? இதில் பெல்ஜியம் எல்லை எந்தமட்டும்? அப்பால் ஜெர்மனியின் எல்லை யெப்படி ஓடுகிறது? இங்கேயுள்ள கோட்டைகள், அரண்கள், மலைகள், நதிகள், மேடுகள், பள்ளங்கள், காடுகள், காடுகரங்கள் இவற்றின் விவரம் என்ன? என்று கேள்விமேல் கேள்வியாகக் கேட்கிறார்கள். பதில்சொன்னால் கெட்டியாகப் பிடித்துக்கொள்கிறார்கள். ப்ரெஞ்சுதேசம் என்றால் புதுச்சேரி, காரைக்கால், சந்திரநகர் என்னும் இவைகளைத்தவிர வேறு எதும் அறியாதவர்களுக்கு இப்பொழுது பெல்ஜியம், ப்ரான்ஸ், ஜெர்மனி, ஆஸ்திரியா, ஹங்கேரி, போலாண்ட், இத்தேசங்களிலுள்ள முக்கியபட்டணங்களெல்லாம் அண்டையூர், அசலூர்போல் காணப்படுகிறது.

சண்டைநடந்த இடங்களின் பேரெல்லாம் நன்றாகத்தெரியும். நதிகளின் ஓட்டமும் நீட்டமும் சுற்றுச் சுழலாட்டமும் அவர்களுக்கு நன்றாகத்தெரியும். பள்ளிக்கூடப் பையன்களெல்லாம் சிறிய "அட்லாஸ்" என்னும் படப் புஸ்தகத்தை வைத்துக்கொண்டு அவைகளை விடாதுபார்த்து வருகிறார்கள். ஊரின் எல்லைப்புறம் தாண்டாத பேர்களெல்லாம் ஐரோப்பா சண்டையென்றால் வெகு சிரத்தையோடு யுத்தசமாசாரம் கேட்கத் தயாராய் வந்துவிடுகிறார்கள். வாசிக்கத் தெரியாதவர்களும் அடுக்குள் காரியம் செய்கிறவர்களும்கூட யுத்தசமாசாரப் பேச்செடுத்தால் "அதென்ன சங்கதி?" யென்று வெகு பக்தி சிரத்தையோடு கேட்க வருகிறார்கள். வேலைக்காரர், கூலிக்காரர், பில்லுக்கட்டுக்காரி முதல் எல்லாருக்கும் இப்பொழுது ஜர்மனி, ப்ரான்ஸ், இங்கிலாந்து என்றால் அண்டையூர், அசலூர்போல் தெரியும். அவர்களுக்கு இந்த அபூர்வசக்தி எங்கேயிருந்துவந்தது? எல்லாம் மனோசக்தியால் தான் வந்தது என்பீர்கள். அந்த மனோசக்தி தான் எத்தன்மையது? அதனால் ஆகும் காரியமென்ன? அந்த மனோசக்தியை உபயோகிக்கும் வழியென்ன? உபயோகிக்கும்போது அதுகொண்டி மாடுபோலும் முரட்டுக் குதிரை போலும் வழியில் இடக்குச்செய்து அநர்த்தம் விளைக்காமல், அதை முறையறிந்து அடக்கியாள்வது எப்படி? இந்தக் கேள்விகளுக்கு பதிற்சொல்லத் தலைப்பட்டால் அது மஹாபாரதமாக வளரும். மஹாபாரதமே இதிஹாஸநூல் (உதாஹரணம்) என்பது இது பற்றித்தான். ஜகத்போர் என்பது தோற்றப் பொருள்களின் நடுவேயிருந்து அத்தோற்றங்களின் உண்மையுணராது அவைகள் செய்யும் தொந்தப்போரில் ஜீவனும் தன்னையறியாது புகுந்துகொண்டு போராடுவதால் நடக்கும் யுத்தத்துக்குச் சொல்கிறது. இப்பொழுது ஐரோப்பாவில் நடக்கும் யுத்தம் எப்படிப்பட்டது என்று ஊன்றிப்பார்த்தால் அது "இராமராவணயுத்தம்" என்று நன்றாய்ப் புலப்படும். வெளித்தோற்றத்துக்கு என்னமோ "ஜெர்மனிக்கும் ப்ரான்ஸுக்கும் சண்டை" என்று தேசங்களின் பேரைச்சொல்லியும், டியூடன் ஜாதியாருக்கும் (ஜர்மானியர்) ஸ்லாவ் ஜாதியாருக்கும் சண்டையென்றும் சொல்லுகிறோம். ஆனால் மிஸ்டர் கார்டினர் எழுதியிருக்கிறபடி உண்மையிற்பார்த்தால் இந்த மஹாபார-ஹதச் சண்டை நாட்டைப்பற்றின தாகவாவது ஜாதியைப் பற்றினதாகவாவது சொல்வதிற்கில்லை யென்று தெரிகிறது.

"பிடரிகொழுத்தஆடு இடையனைமதியாது" என்று பெரியோர் பழமொழி பொன்றுண்டு. பிடரியாவது சரீரபலத்துக்கு மூலஸ்தானமாயிருக்கும் முக்கியஸ்தானம். தேஹத்துக்கு உபாதி காணுமுன் கழுத்துப்பிடரியில் வலி தோன்றுவது சகஜம். தேஹத்திலோடும் நாடி நரம்புகளுக்கு மூலஸ்தானம் (வேர்போன்ற

இடம்) இருக்குமிடம் பிடரி. "பிடரிகொழுத்த ஆடு" என்றால் சரீரபலம் மிகுந்தவர்கள் என்று சாமானியமாகவும், "தேஹோஹ பாவம்" அதாவது சரீரக்கொழுப்பினால் மமதை கொண்ட அஹம்பாவமதம் ஏறினவர்கள் என்று விசேஷமாகவும் அர்த்தம்கொள்ளும்: அவர்களுக்கு தர்ம நெறிகாட்டும் இடையனாகிய பகவானிடத்தில் மதிப்பிராது என்று அர்த்தம். இராவணன் திரிலோகாதிபதி யென்று பேர்பெற்று ஜகதீசுவரனையும் வசப்படுத்திக் கொண்டு இராவணேசுவரன் என்று புகழ் பெற்றிருந்தாலும், தன்னைக் கேட்பாரொருவரு மில்லையென்கிற அஹம்பாவக்கொழுப்பினால் அதர்மகாரியத்துக் குடன்படுவானாயினான். கர்மதர்ம மறியாமையினால் அவன் பலமெல்லாம் அவலமாகப்போயிற்று. அந்த மாதிரி இக்காலத்தில் ஆணவக்கொழுப்பேறிய இராணுவக்கக்ஷி யொன்றிருக்கிறது. அவர்கள் "வல்லான் வகுத்தது வாய்க்கால்" என்கிற உலகநீதியை மேலாகக் கொண்டாடுகிறவர்கள். சண்டைக்காலத்தில் இரணகளத்தில் யுத்தம்செய்வதும் சமாதானகாலத்தில் சூதுவாது யுத்தம்செய்து தங்காரியத்தின் மேலே கண்ணாயிருப்பதுமாக நடந்துவருகிறவர்கள். இவர்களுக்குப்பொதுவாய் 'மிலிடேரிஸ்ட்' (Militarist) என்றும், தந்திரவாதிகள் (Diplomats)என்றும் பேர் வழங்குகிறார்கள். இவர்களைப் போராட்டக்காரர்களென்றும் வாதாட்டக்காரர்களென்றும் சொல்லலாம். அரசியலில் நடக்கும்கோணல்மாணல்களுக்கெல்லாம் இவர்கள் தான் காரணமென்றும், இவர்கள் செய்கர்மங்களால் தர்மம் தலைகவிழ்ந்து பெரும்போர் விளைகிறதென்றும் ஸமஷ்டிவித்தையில் ஞான முதிக்கப்பழகினவர்கள் சொல்கிறார்கள். "அரசனெவ்வழி, குடிகளவ்வழி" யென்றிருப்பதால், அரசன் இவர்கள் வழிப்பட்டானாகி, குடி, படை, நாடு, அரண் என்கிற இராசாங்கங்கள் நான்கும் அரசன் வழிப்பட்டுக்கடைசியில் எல்லாரும் பெரும்போரில் சிக்கி மடிகிறார்களென்பது அவர்களுடைய சித்தாந்தம்.

"இராமனாண்டாலென்ன இராவணனாண்டாலென்ன" என்று நமக்குள் ஒரு பழமொழியுண்டு. அதற்கு அர்த்தம் இக்காலத்துப் படிப்புப் படித்தவர்கள் ஜனங்களுக்கு இராஜதர்மத்தில் சிரத்தையில்லையென்று சொல்கிறார்கள். உண்மையாக ஊன்றிப்பார்த்தால் அதன் அர்த்தம் வேறு என்று தெரியவரும்.

இராமன் தர்மஸ்தாபனம்செய்ய அவதரித்த மஹாபுருஷன். இராவணன் கர்மஸ்தாபனம் செய்து திரிலோகாதிபதியென்று புகழ்பெற்ற சூரன்.

இவர்களிருவரும் போராடிக்கொண்டிருக்க கர்மதர்மம் எதுவோ அதுவே நிலைபெற்று நித்தியபலனை யளிக்கிறது. தர்மம் பெரிதென்கிறவன் ஆண்டாலென்ன? கர்மம் பெரிதென்கிறவன் ஆண்டாலென்ன? யார் கைவலுத்தால் தானென்ன? கர்மத்தில் தர்மமும் தர்மத்தில் கர்மமும் இணைபிரியாது சேர்ந்தேயிருக்கிறது. இராமரா யவதரித்து தர்மஸ்தாபனம் செய்ததுபோலவே, அடுத்த கிருஷ்ணாவதாரத்தில் அந்த மஹாவிஷ்ணுவே ஜகத்ரக்ஷணார்த்தம் கர்மஸ்தாபனம் செய்யவேண்டி அர்ச்சுனனுக்கு கர்மதர்மத்தை யுபதேசித்து நைஷ்கர்ம ஸித்தியின் மேன்மையை ஸ்தாபித்தார். ஆதலால் அரசாளும் மன்னர் போராட்டக்காரர்களும் வாதாட்டக்காரர்களுமான அவர்கள் வசப்பட்டுழலாமல், அவர்கள் தேசக்ஷேமத்தையும் ஜனக்ஷேமத்தையும் காக்கப்பாத்திரப்பட்டவர்களாதலால் தர்மத்துக்கு கேடு வாராமலும் கர்மத்துக்கு நஷ்டம் வாராமலும் நிஷ்காமிய சித்தர்களாயிருந்து பரோபகார சிந்தையினாலும் ஜீவகாருண்யமிகுதியினாலும் அஹத்தூய்மைபெற்று நைஷ்கர்ம ஸித்தி சாதனங்களைக் கையாண்டு வருதலே இப்படிப்பட்ட பாரை யழிக்கும் யுத்தம் வராமல் காக்க யுக்தமான வழியாகுமென்று மிஸ்டர் கார்டினரைப்போன்றமதசித்தாந்த முடையவர்கள் அனேகர் அவர்கள் அபிப்பிராயத்தைத் தெரிவித்து வருகிறார்கள். இஃதெல்லாம் மேற்றிசையாருக்கும் மேற்றிசைப் படிப்பு (அதாவது சோற்றுப்

படிப்பு) மட்டும் படித்த கீழ்த்திசையாருக்கும் உணர்வரிதாயினும், ஸாதுக்களுக்கும் சத்துக்களுக்கும், குழந்தை மனம் மாறாத உடலிற் சிறியார் பெரியார் எல்லாருக்கும், ஸாது ஸங்கப் பழக்கமுள்ளவருக்கும் வெள்ளிடை மலை போலும் உள்ளங்கை நெல்லிக்கனி போலும் தன்னிலக்காகத் தானே விளங்குவதாகும். அவலை நினைத்து உரலை யிடிக்கிற கதையாக ஒன்றை யுத்தேசித்து அவ்வுத்தேசம் நிறைவேறாத ஒரு வீண் காரியத்தைச் செய்து சங்கடப்பட்டு சங்கட மியற்றுவோர் எப்போதும் சங்கடம் விளைத்துக்கொண்டே தானிருப்பார்கள். அவர்களுக்கு பயந்து இந்த உலகத்திலிருப்பது அசாத்தியமாகும். அவலை நினைத்துக்கொண்டு உரலை யிடிக்கிறவன் பிறருக்குத் தலைவலியுண்டுபண்ணுவதும் தன் அங்கம் நோவதுமன்றி வேறு காரியவலித்தியைக் காணான். ஆதலால் மனச் சாக்ஷியை மூட்டை கட்டித் தூர வைத்துவிட்டு நன்னடத்தைக்காக வேலியெடுத்து வழி யடைக்கிறவர்கள், அடைக்கட்டும். அப்படிப்பட்டவர்கள் தாமொன்று நினைக்க தெய்வமொன்று நினைக்கிறதென்பதைப் பக்குவம் வந்த காலத்தே யுணர்வார்கள். தன் சித்தம் கோணாது ஜீவசங்கல்பத்தை விட்டு ஈசுவர சங்கல்பத்தை யொட்டி நடப்பவர்களுக்கு இகப்பரம் இரண்டிலும் ஒரு போதுங்குறைவுவராது. அப்படிக்கின்றி குறைவாகத் தோற்றுவதெல்லாம் கடையில் நிறைவாகவே முடியும். "Out of evil cometh good" என்பதின் அர்த்தம் இதுவே. "அதர்மம் மலிந்து தலையெடுத்து தர்மம் தலைகவிழச் செய்யும்போது நான் அவதாரமாகி உலகில் தர்மத்தை நிலைக்கச் செய்கிறேன்" என்ற பகவத் வாக்கியத்தின் உட்கருத்தும் இதுவே.

---

## BIOGRAPHICAL SKETCHES.

### II. Elizabeth Fry.

### (Illustrated)

## சரித்திரமஞ்சரி.

### II. எலிஸபெத் ப்ரை.

"தொட்டனைத்தூறு மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத்தூறு மறிவு." *—குறள்.

பூர்வீகத்தில் ஹிந்துக்களுக்குள்ளும் தற்காலம் ஐரோப்பிய ஜாதியாருக்குள்ளும் ஸ்திரீகள் தங்கட்கேலாதன வென்று சாதாரணமாக மதிக்கப்படும் பல துறைகளில் இறங்கி வேலை செய்து லோகோபகாரிகளாய்ப் பெரும் கீர்த்தியும் பெற்றிருக்கிறார்கள். பெண்பாலார் படித்தால் அவர்கள் பெண்மையை இழந்து விடுவார்களென்னும் தப்பெண்ணம் நம் தேசத்தாருக்குள் இப்பொழுது பரவியிருப்பதுபோலவே அங்கிலேயருக்குள்ளும் இந்நூற்றாண்டின் துவக்கத்திலும் அதற்கு முன்னும் பரவியிருந்தது. இருந்தாலும் அக்காலத்தில் அவர்களுக்குள் விசேஷ புத்தி, வித்தை, பரோபகாரசிந்தை முதலிய உத்தம குணங்கள் மிகுந்துள்ள மாதர்கள், ஜனசாதாரணமான மேற்படி தப்பெண்ணத்துக்குள்பட்டு அவர்கள் அந்தக்கரண சக்தியை விர்த்திபண்ணாது கட்டி மூலையில் போட்டுவிட்டு 'வழக்கம் வழக்கம்' என்கிற பந்தத்துக்குள்பட்டு அதன் விலங்கு பூண்டு தூங்கவில்லை. ஸ்திரீகள் கல்வி, சாஸ்திரம், கலைக்கியான முதலியவை ஓதி அவற்றில் பயிற்சிபெற்றுத் தேர்ச்சியடைந்தால் அவர்கள் உண்மையான பெண்மைக் குணத்தை யிழந்து பெண்களுக்குரிய தங்கள் இல்லறக் கடமைகளைக் கவனிக்காது விட்டுவிடுவார்களென்று சொல்வோர் இத்தேசத்திலிருப்பதுபோல் அங்கிலேய நாட்டிலும் அக்காலத்து அதிகமில்லாதிருக்க வில்லை. இது மிகவும் தப்பான எண்ணம்; உண்மைக்கு ஒவ்வாதது; என்று நாம் வற்புறுத்திக் கூறாமலே

* "மணலின்கண் கேணி தோன்றிய அளவிற்றாக ஊறும்; அதுபோல மக்கட்கு அறிவு கற்ற அளவிற்றாக ஊறும்."—பரிமேலழகர்.

விவேகிகளுக்கு விளங்கும். புத்திசாலியான பெண் அறிவுப் பயிற்சி செய்வதால் அவள் தன் கடமைகளை மறந்து போவதற்குப் பதிலாகப் பெண்மைக்குரிய அவள் காரிய கடமைகளின் பொறுப்பு பிரயோசனங்களை நன்றாயுணர்ந்து, அக்கடமைகள் காரியங்களை அவற்றிற் குண்மையாகவுள்ள ஏற்றத்திற்கேற்ப மதிப்பாளாவளென்பது வாஸ்தவத்துக்கும் அனுபவத்துக்கும் பொருந்தியதாகும். 'தண்ணீர் நில நலத்தால்' மேம்பட்டு அதன் குணம் பிரகாசிப்பது போல் கல்வியும் அதைபடைவோர் குணநலத்தால் பிரகாசிப்பதாகும். மணற்கேணி தோண்டத்தோண்ட ஜலம் ஊறுவதுபோல் மாந்தர் படிக்கப்படிக்க அவர்கள் புத்தி விர்த்தியாகுமென்று நாயனாரும் சொல்லியிருக்கிறார். இது இருபாலார்க்கும் பொதுவாகச் சொன்னதன்றோ. அனுபவத்திலும் அப்படியே தோன்றக் காணலாம். முற்காலத்தும் தற்காலத்தும் மேன்மையடைந்து சென்ற எத்தேசத்து மாதர் சரித்திரத்தாலும் விளங்கும்.

அங்கிலேய நாட்டில் பொது விஷயங்களிலுழைத்துப் பெருந்தன்மைக்குப் பேர்போனவர்களான ஸ்திரீ ஜாதிகள் பலருடைய சரித்திரங்களையும் படித்துப்பார்த்தால் மேலேசொல்லிய உண்மை பிரத்தியக்ஷமாக விளங்கும். இவர்கள் பேர் அநந்தம்; ஒவ்வொருவரும் பொது ஜனோபகாரமான ஒரு துறையிலிறங்கியுழைத்து அத்துறையில் அவர்கள் ஜனங்களுக்குச் செய்த நன்மைகளினால் பரோபகாரிகளென என்று மழியாப் புகழுடம்பெடுத்திருக்கிறார்கள். இவர்களில் 'எலிஸபெத் ப்ரை' 'மேரி கார்பெண்டர்' 'ப்ளாரென்ஸ் நைத்திங்கேல்' 'ஜோஸெபைன் புட்லர்' 'ஆக்டேவியா ஹில்' என்னும் பேர்கள் மிகவும் பேர்போனவை. இவர்களன்றி கலைக்கியானத்திலும், பாஷாக்கியானத்திலும், சாஸ்திரப் பயிற்சியிலும், ராஜ்யபாரத்திலும் விசேஷநிபுணத்துவம் காட்டிப் பேர்பெற்ற மாதர்களுமுளர். இப்படி பிரக்கியாதிபெற்ற மாது சிரோமணிகள் அவர்கள் மணம்பூண்டு இல்வாழ்க்கை நடத்தி வந்த பொழுது 'வாழ்க்கைத்துணைநலம்' அவர்களிடத்து எவ்வளவும் குறைவுபடாது நிறைவுபட்டு விளங்கியது அவர்கள் சரித்திரத்தைப் படிக்க விசிதமாகும்.

இந்த சரித்திரம் எலிஸபெத் ப்ரை என்னும் பரோபகார சிரேஷ்டையைக் குறித்தது. மாதர்கள் அதிகமாய் கல்வித்தேர்ச்சி யடைவதால், அவர்கள் தங்கள் வீட்டுக்கு மட்டுமின்றி நாட்டுக்கு முபயோகமானவர்களாகும் பெருந்தன்மையடைகிறார்களன்றி வீட்டுவேலைகளை விட்டுக் கெட்டுப்போவதில்லை யென்பது இச்சரித்திரத்தால் விளங்கும். எலிஸபெத் ப்ரை 1780-வது வருஷத்தில் பிறந்தாள். ஆனால் இந்த அம்மாள் பரோபகார சிரேஷ்டை யென்று பேரெடுக்கச்செய்த வேலை 1813-ம் வருஷத்தில்தான் ஆரம்பிக்கப்பட்டது. இவள் நார்விச் பட்டணத்தில் 'கர்ணி' யென்று பேர்போன ஒரு சம்பத்துள்ள குடும்பத்தில் பிறந்தாள். இவளுடைய பெற்றோர்கள் 'குவேகர்கள்' என்னும் ஒரு உள் மதக்கோஷ்டியைச் சேர்ந்தவர்களா யிருந்தார்கள். ஆனால் அம்மதக்கோட்பாடுகளை அவர்கள் ஒழுங்காய் அநுசரித்ததில்லை. அக்காலத்தில் அந்த கோஷ்டியைச் சேர்ந்தவர்கள் யாரும் அவர்கள் குடும்பத்துப் பெண்களை சங்கீதம், நாட்டியம் முதலிய வித்தைகள் பயிலவிடுவதில்லை. பெண்கள் உயர்தரப்படிப்புப் படிப்பதும் கூடாதென்று அப்பொழுது தடுக்கப்பட்டிருந்தது. எலிஸபெத்தின் பெற்றோர்கள் முன் சொன்னபடி அம்மதக்கோஷ்டியின் கோட்பாடுகளை அதிக கண்டிப்பாய் மதித்தவர்களில்லையாதலால், அவர்கள் தங்கள் குழந்தைகளை அக்கால சம்பிரதாயத்துக்கு விரோதமாக சங்கீத நாட்டிய முதலிய வித்தைகள் பயில விட்டதன்றி, பையன்களைப்போல் பெண்களையும் கணித சாஸ்திரம், லத்தீன் பாஷை முதலிய உயர்தரப்படிப்பும் பயிலவிட்டு வந்தார்கள். இப்படி நமது எலிஸபெத் இளமைப்பருவத்திலே அவள் காலத்துப் பெண்களை விட மிகவும் மேலான வித்தியாப்பியாசம் பெற்று கல்வியின் பயனை யடைந்தவளா யிருந்தாள்.

சிறு வயதிலே இவளிடத்து இயல்பா யமைந்துள்ள அநுதாபகுணம், பரோபகாரசிந்தை, ஆராயுந்தன்மை, எடுத்தது முடிக்கும் ஊக்கமுடைமையாகிய குணங்கள் இருப்பது வெளிப்படத் தொடங்கின வென்று தெரிய வருகிறது.

இந்த அம்மாள் சிறுபெண்ணாயிருக்கையில் கோயிலில் பாதிரியார் ஒருவர் செய்த பிரசங்கத்தால் மனதுருகி மனிதரில் கடையராயுள்ளார் கஷ்டங்களை நீக்கி அவர்களைநல்வழிக்குக் கொண்டுவர வேண்டுமென்கிற எண்ணம் இவள்மனதில் உதித்தது. இந்த எண்ணம் மனதில் பதியப்பெற்ற மாது ௨௦-வயதில் மணமுடிக்கப் பெற்று புருஷன் வீடுபோய் வாழ்கையில் அக்கம்பக்கங்களிலுள்ள ஏழைகள் துயரை நீக்குவதில்சிரத்தையெடுத்துழைத்துவந்தாள். அவளுடைய கணவரும் இந்த சத்விஷயத்திலுழைக்க அந்த அம்மாளுக்குள்ள பிரீதியை யறிந்து அச்செய்கையில் தாமும் அநுதாப சிந்தையுடையவராய்க்காட்டி அவள் சிறு முயற்சியைக் கண்டு களித்து அவளை உற்சாகப்படுத்திவந்தார்.



Elizabeth Fry. எலிசபெத் ப்ரை.

ஒருநாள் எலிஸபெத் ப்ரை* தெருவோடு போகையில் ஒரு பிச்சைக்கார ஸ்திரீ பிணியால் மிக மெலிந்து நொந்துபோன குழந்தையொன்றைக் காட்டி இவர் பரிதாபத்தைக் கிளப்பிப் பிச்சைகேட்டாள். இயல்பாகவே மிகவும் பரிதாப சிந்தையுள்ள இம்மாதுமனம் அக்குழந்தையின் ஸ்திதியைக் காணவும் அதிக

* அங்கிலேய ஜாதியாருக்குள் பெண்கள் மணமுடிக்கப் பெற்றபின் அவர் பிறந்த குலப்பெயரை விட்டு புகுந்த குலப்பெயரைத் தரித்துக் கொள்வார்கள். நமக்குள் பெண்களுடைய கோத்திரம் புருஷன் கோத்திரமாக மாறுவதுபோல், அவர்கள் கலியாணகாலத்தில் குலப்பெயரை மாற்றிக்கொள்வது வழக்கம்.

பரிதாபத்தால் நெக்குவிட்டுருக, ஐயோ! வென்றிரங்கி அப்பிச்சைக் காரியுடன் கூடச்சென்று அக்குழந்தைக்கு வேண்டிய உதவி செய்வதாகச் சொன்னுள். உடனே அப்பிச்சைக்காரி மெல்ல தப்பித்துக்கொண்டு போகப்பார்த்தாள். இதனுல் அவள் விரும்பியது பணக்கொடையே யன்றி குழந்தைக்கு உண்மையாக உதவி விரும்பினவளல்லவென்பது பிரத்தியக்ஷமாயிற்று. ஆகவே *மிஸ்ரஸ் ப்ரை அம்மாள் அப்பிச்சைக்காரியைப் பின்தொடர்ந்து சென்றுள். சென்று அவளிருந்த குடிசைக்கு வரவே அங்கு பல பிணிகளால் பீடிக்கப்பட்டு பல படியாக வருந்திக்கொண்டிருந்த குழந்தைகள் பலவற்றைப் பார்த்தாள். உடனே தன்னை வழிமை மறித்துப் பிச்சை கேட்டவள் இப்படிப்பட்ட குழந்தைகளைச் சேகரித்து வைத்துக்கொண்டு அவைகள் படும் அவஸ்தைகளைக் காட்டி பரிதாபத்தைக் கிளப்பிப் பிச்சை வாங்கிப் பிழைக்கும் பாதகர் வகுப்பில் சேர்ந்த ஒருத்தியென்றுதெரியவந்தது. இக்காக்ஷியைக் கண்டது முதல் 'எலிஸெபெத் ப்ரை' என்னும் தர்மிஷ்டி மனம் ஒருவகையிலுழைக்கத் தேறிவிட்டது. இதுமுதல் மிகவும் இழிகுலத்தாரும் குற்றம்செய்துபிழைப்பவருமாய்ப் படுகுழியில் விழுந்த இழிகுல வகுப்பு ஸ்திரீகளுடையவும் குழந்தைகளுடையவும் நிலைமையை உணர்ந்து அவர்வளை ஒருவாறு சீர்ப்படுத்தி நல்ல ஸ்திதிக்குக் கொண்டுவருவதே அவர் கடமையென்று தீர்மானித்துக்கொண்டு அதற்காக உழைப்பதே அவர் நோக்கமாயிருக்க வேண்டுமென்று கங்கணம் பூண்டார்.

இத்தீர்மானம் செய்து கங்கணம் பூண்டபின் இது விஷயத்தைப்பற்றி அவருடைய அல்லார் அபலார் சிநேகிதர்கள் இவர்கள் கூடும் கூட்டங்களில் பிரஸ்தாபித்துப் பேசி அக்கீழ் ஜாதியாருடைய நிலைமையில் மற்றவர் பரிதாபத்தைக் கிளப்பிவிட்டு அவர்களைச் சீர்திருத்தும் வேலையில் அவர்கள் அநுதாபத்தைச் சம்பாதித்துக்கொள்ள முயன்றுவந்தாள். இப்படி நாளாவட்டத்தில் இவ்வம்மணி செய்துவந்த முயற்சி பலப்படப்பட அவள் ஜெயில்களிலுள்ள குற்றவாளிகளைக் கண்டு அவர்களை நல்ல நிலைமைக்குக் கொண்டுவர என்ன செய்யலாமென்று உபாயந்தேட ஆரம்பித்தாள். இதற்காக நியூகேட்' என்னும் சிறைச்சாலைக்கு அடிக்கடி விஜயமாகப் போய் வருவது வழக்கம். அங்கே ஆண் கைதிகள் பெண்கைதிகள் குழந்தைகள் எல்லாரையும் ஒருமிக்க, ஆடுமாடுகளைப்பட்டியி லடைப்பதுபோல் பேதமின்றி ஒரு அறையில் போட்டு அடைத்துவைத் திருப்பதையும் அதனுல்விளையும் தீங்குகளையும் கண்டு, அவைகளை நிவர்த்திக்க வழிதேடினதன்றி ஜெயிலிலுள்ள கைதி ஸ்திரீகளையும் அவர்கள் குழந்தைகளையும் சன்மார்க்கத்துக்குத் திருப்பலாமென்று அவர்களுக்காக ஜெயிலிலே ஒரு பள்ளிக்கூடமும் வைத்தாள்; அவளும் அவள் தோழிகளிரண்டொருவரும் தனியாக இப்படி உழைத்து வந்த உழைப்பு காரியத்தில் நல்ல பலன் தருவதாகக் காணப்படவே குற்றவாளிகள் நிலைமையைச் சீர்திருத்தவேண்டிய வழிவகைகளைப்பற்றி அந்த அம்மாள் பொதுவிடங்களில் பயிரங்கமாகப் பிரசங்கிக்கவும் அதிகாரிகளுக்கு மனுக்களெழுதி அவர்கள் ஒத்தாசையைக் கோரவுமாக இப்படி சிறுகச்சிறுக அவள் முயற்சியைப் பலப்படுத்திக் கொண்டாள்.

முதலில் பலபேர் கூடியசபையில் பயிரங்கமாக நின்று பேச வெகு கூச்சப்பட்டாள். பயிரங்கமாகப் பலரறிய முன்னின் றுழைப்பது அவளுக்கு முதலில் மகா வெறுப்பாயிருந்தது. மனதுக்கும் மிக வருத்தமாயிருந்தது.

> "கலங்காதுகண்ட வினைக்கட் டுளங்காது
> தூக்கங் கடிந்து செயல்."*

என்று திருவள்ளுவர் சொல்லியிருக்கிறுர். தன் கட

* 'மிஸ்ரஸ்' என்பது மனைவிக்குரிய மரியாதைப் பட்டம். 'கன்னியர்களுக்கு 'மிஸ்' என்றுசொல்கிறது.

* "மனந்தெளிந்து செய்வதாகத் துணிந்த வினையின்கண் பின்னசைதலின்றி நீட்டித் தலையொழிந்து செய்க"—பரிமேலழகர்.

மை யின்னதென்று* ஒருதரமுணர்ந்தபின், நாயனார் சொற்படி 'மனந்தெளிந்து செய்வதாகத் துணிந்த' வேலையினின்று பின் வாங்காமல் சடுதியில் அதைச் செய்யத் தொடங்கினாள். முதலில் மனக்கலக்கமும் கஷ்டமும், கூச்சமும் உண்டுபண்ணுவதாக விருந்தவேலை போகப் போக வெகு சுலபமாக விருந்ததன்றி மனதுக்கு இன்பமும் ஆறுதலும் பயக்குவதாயிற்று.

இந்தப் புண்ணியவதி இழிகுலத்தினரிலும் இழிவானவரான இவ்வகுப்பாரிடத்து உண்மையான அன்பு பாராட்டி அவர்கள் நிலைமையைச் சீர்திருத்திவர முயற்சிக்கையில் அவரிருந்த ஊரார் பலர் இவர் செய்கையை விநோதமானதென்று சொல்லி இவரை ஏகத்தாளம் செய்து பழித்தார்கள். அப்போதிருந்த பிரபலமான கவிவாணர் ஒருவர் இவர் சிறைச்சாலையில் பள்ளிக்கூடம் வைத்துழைத்து வருவதைப்பற்றி ஏளனம் செய்து அவ்வேலையை விட்டுவிடும்படி ஒரு பாட்டுப்பாடிப் பிரசுரித்தார். அவரோடு கூட வசித்தவர்களில் அநேகர் இப்படி அவர் செய்கையைக்கண்டு நகைத்துப் பரிகாசம் செய்தும், சிலர், 'இச்செய்கையெல்லாமேனுனக்கு? விவாகமாகிப் பிள்ளை குட்டிகளைப் பெற்றவளுக்கு தன் புருஷனையும் பிள்ளைகளையும் போஷித்துக் காப்பாற்றி வருகிற கடமையைவிட வேறு கடமையென்னவிருக்கிறது?' என்று இவ்வேலையை இகழ்ந்து காட்டியும், அந்தம்மாள் தான் சரியென்று சண்ட வேலையைவிடாது ஊக்கமுடன் செய்து வந்தாள்.

'துன்ப முறவரினும் செய்க துணிவாற்றி*
இன்பம் பயக்கும் வினை."

இவ்வேலையை இவ்வளவு ஊக்கத்தோடு செய்து வந்தும் இவர் தம்மில்லத்தில் செய்யவேண்டிய வீட்டு வேலைகளைப் பாராதுவிடவில்லை: தன் புருஷனுடையவும் கஉ-குழந்தைகளையுடைய தன் பெரிய குடும்பத்தி னுடையவும் க்ஷேமத்தைநாடிச் செய்யவேண்டிய பல குடும்பகாரியங்கள், நித்தியக்கடன்கள் இவற்றில் எதையும் அலக்ஷியம் செய்தவராகவில்லை. தான் ஸமஷ்டிஸேவை யார்த்தம் பொதுவிஷயத்தில் கவனம் வைத்துழைத்ததால் இல்லறத்துக்குரிய தம் கடமைகள் எதையும் கவனிக்காதுவிட்டதாகச் சொல்ல ஏதுமிடமின்றி அவைகளையெல்லாம் வெகு ஜாக்கிரதையாகப் பார்த்து வந்தார். பிந்தி இவர் குடும்பத்துக்குப் போதாக் காலம்வந்து இவர்களுக்கு கஷ்டதிசை வந்தது. அப்போதும் இப்பொதுநல காரியத்தைக் கைவிடாமல், தம் கஷ்டதிசையாலுற்ற வருத்தங்களை இத்தர்மவிஷயத்தி லுழைக்கு முற்சாகத்தில் மூழ்கிப்போகச்செய்து, தாமும் தம் குடும்பத்தோடு சந்தோஷமாயிருந்து, துர்ப்பாக்கியத்தால் துன்பசாகரத்தில் மூழ்கியுள்ள திக்குத் திசையற்ற கீழ்ஜாதி ஜனங்களை நல்ல ஸ்திதிக்குக் கொண்டுவர முயற்சித்து வந்தார். இவர் செய்த முயற்சியால் தம் சொந்த தேசத்திலுள்ளஜெயிலேற்பாடுகள் சீர்ப்பட்டு, குற்றம் செய்து கெட்டுப்போனவர்களி லனேகர் இவர் ஏற்பாட்டை யனுசரித்து ஸ்தாபிக்கப்பட்ட ஸ்தாபனங்களால் நல்ல கதிக்குத் திரும்பிவர வழியமைந்ததன்றி, அந்நிய தேசங்களில் கதியற்றவர்களுக்கும், கெட்டுப் போனவர்களுக்குமுள்ள ஸ்தாபனங்களை இவர் விஜயம் செய்து அவைகளின் காரியவிசாரணையிலிருந்த குறைவுகளை எடுத்துக் காட்டினதால் அந்த ஸ்தாபனங்களும் சீர்ப்பட்டு நல்ல நிலைமைக்கு வரவும் காரணமாயிருந்தனர். கைதிகள், குற்றவாளிகள், நாதியற்றகுழந்தைகள் இவர்களன்றி இன்னும் ஈளியஸ்திதியிலும் துர்ப்பாக்கிய ஸ்திதியிலுமுள்ள அனேகவகுப்பினர்களுடைய நிலைமை இவருடைய பரோபகார முயற்சியால் சீர்படுத்தப்பெற்று அவர்கள் நல்லஸ்திதிக்குக் கொண்டுவரப்பெற்றார்கள். ஏழைகள் படும் தேகவருத்தங்கள் பலவற்றை நீக்கி, அவர்களுக்கு சன்மார்க்க போதனை செய்துவர முயற்சித்ததன்றி கூலிக்காரர்களும் வீட்டுவேலைசெய்து பிழைப்பவர்களும் ஆகிய வகுப்பார் ஒழிந்தவேளைகளில்

* (துணிவு-கலங்காமை.) துணிவாற்றி-தளராது திட்ப முடையராய்.

உல்லாசமாக இருந்து வாசிக்க அவர்களுக்குப் புஸ்தகம் கடன் கொடுக்கும் புஸ்தகசாலைகள் சிலவும் ஏற்படுத்தினர். இப்படி அவர் சாகுங் காலமளவும் தன்னைச் சுற்றியுள்ளவர்களுக்கு நன்மைசெய்ய நானுவிதத்திலு முழைத்து வந்து, கடைசியில் கஅசருடு-ம் வருஷத்தில் அவருடைய சுஙு-வது வயதில் யாவரும் மெச்சப் பரோபகாரியென்று புகழுடம்பெடுத்து நிலையற்ற இவ் யாக்கையைத் துறந்து புகழுடம் போடு பரமபத மடைந்தார்.

இப்பொழுது நாம் "பாலபோத ஸமஷ்டி ஸேவை ஸாதனம்" என்று பள்ளியிற்படிக்கும் சிறுவர்கள் (Social Service)என்கிற "ஸமஷ்டி ஸேவை" செய்யப் பயிலவேண்டுமென்று கனம் லார்ட் அண்ட் லேடி ஹார்டிஞ்சவர்கள் ஏற்படுத்திய பாலர்திருவிழாக் கொண்டாட்ட நாளை யொட்டிச் செய்து வரும் ஏற்பாட்டில் சிரத்தையுள்ளவர்கள் இந்த அம்மையின் சரித்திரத்தைப் படிக்க அவர் உதாரணத்தால் விளங்கும் நடத்தையை மேலானதென்று மெய்ச்சிக் கையாடத்துணிவார்களென்பதிற் சந்தேகமில்லை.

"அன்பிலார் எல்லாந் தமக்குரியர், அன்புடையார் என்புமுரியர் பிறர்க்கு" என்றார் திருவள்ளுவநாயனார். கிராமங்களில் பொதுவிஷயமாய் உழைக்கின்றவர்கள் விவேகசிந்தாமணியை வாங்கி வாசிக்கிறவர்களாயிருந்து "விவேகசிந்தாமணி உபசார சங்கத்தைச்" சேர்ந்துழைக்கும் பாலர்களாயிருந்தால் அவர்களுக்கு உதவியாக வேண்டிய சாதகம் செய்ய "ஸ்ரீ லோகநாயகி ஞாபகசின்ன நிதி"யிலிருந்து சிறிது பொருளுதவிசெய்து "விவேகசிந்தாமணியை" வாங்கியனுப்பச் சித்தமாயிருக்கிறோம். இப்படியாகச் சென்னையிலுள்ள "மதராஸ் ஸோஷியல் ஸெர்விஸ் லீக்" என்னும் ஸமஷ்டிஸேவை சங்கத்தாரின் காரியதரிசி கேட்டுக்கொண்டதின்பேரில் ஆஸ்பத்திரியிலுள்ள நோயாளிகளும் மற்ற ஏழைகளும் மனோற்சாகமுண்டாக வாசிக்கக்கூடியதாய் விவேகசிந்தாமணி கொடுத்துதவி வருகிறோம். அச்சபையைச் சேர்ந்துழைப்பவர்கள் பெரும்பாலும் பி.ஏ., பி.எல். பரீக்ஷைகளில் தேறி சட்டப் பரீக்ஷைக்கு வாசிக்கும் மாணவர்களா யிருக்கிறார்கள்.

இதை எழுதிமுடித்த் அச்சிடப்போகும் சமயத்தில் மேற்படி "ஸோஷியல் ஸெர்விஸ் லீக்" காரியதரிசியவர்கள் அவருடைய சங்கத்து ஆஸ்பத்திரி கமிட்டியாருடைய ரிபோர்ட்டிலிருந்து விவேகசிந்தாமணியைப் பற்றிய பாகத்தைக் குறிப்பிட்டெழுதி யனுப்பியிருக்கிறார். அதிலே நோயாளிகள் ஆயாஸம் தீரவென்று அவர்களுக்கு மனோற்சாகத்தை யுண்டுபண்ண வேண்டிக்கொடுக்கப் பெற்று வரும் கிரந்தங்களில் விவேகசிந்தாமணியை அவர்கள் சிரத்தையுடன் வாசித்து வருகிறார்களென்று எழுதி யிருக்கிறது. அந்த ரிபோர்ட்டைக் கீழே பிரசுரிக்கிறோம்.

The Secretary to the Madras Social Service League sends us the following extract from the Report of the Hospital Committee of the League :—Reporting on the work of the last week done in the General Hospital, the Captain of the Hospital Committee writes : "The *Vivekachintamani* is being appreciated by the patients."

---

பெற்றோர்கள் பிள்ளைகளுக் கறிவிப்பு.

விவேகசிந்தாமணியை வாங்கி வாசிக்கவிரும்புவோர் உடனே முன்பணமனுப்பிச் சந்தாதாரர்களாகச் சேரல்வேண்டும். வித்யா இலாகா தலைவருடைய சிபார்சை யங்கீகரித்து கவர்ன்மெண்டார் விவேகசிந்தாமணி பிரதம பாடசாலைகளிலும் வாசிக்க யோக்கியமானதா யிருக்கிறதென்று தெரிவித்து கவர்ன்மெண்ட் பிரதம பாடசாலைகளுக்கெல்லாம் அதை வாங்கியனுப்ப உத்திரவு செய்திருக்கிறார். லோகல் முனிசிபல் பாடசாலைகளிலும் அதைவாங்கி யுபயோகிக்க அனுமதி தந்து பத்திராசிரியரை அவர்களுக்கெழுதிக் கேட்கும்படி உத்தவுபிறப்பித்திருக்கிறார்கள். ப்ரைவேட் பாடசாலைகளின் உபாத்தியாயர்களும் பிள்ளைகளும் அதை வாங்கிப்படிக்க இதுதான் சமயம். காலஹரணம் செய்யக்கூடாது. காபிகள் சீக்கிரத்தில் செலவாய்விடும். பள்ளிக்கூடப் பிள்ளைகளுபயோகத்துக்கு மாத்திரம் நூற்றுக்கணக்காய் காபிகள் தேவையிருக்கின்றன. இரண்டாம் பதிப்புக்கு அவகாசமில்லை. ஆகையால் உடனே விவேகசிந்தாமணி மானேஜர்களுக்கு எழுதிப் பெற்றுக்கொள்ளவும்.

Address:—

The Managing Agents,
the "*Vivekachintamani*," *Lalitalaya*, 19, *Adam Street*,
*Mylapore, Madras, S.*

## PROVERBS AS AIDS TO CHILD-STUDY.

### பாலபோத சிக்ஷாஸாதனம்.

பழமொழி விளக்கம்.

(141-வது பக்கத்தொடர்ச்சி.)

(16) ஒரு புத்திரன் ஆனாலும் குரு புத்திரன் வேண்டும்.

(17) ஒன்றைப் பெற்றாலும் கன்றைப்பெற.

(18) ஒன்றைப் பெற்றாலும் நன்றைப்பெற வேண்டும்.

இம்மூன்று பழமொழிகளின் அருத்தமும் ஒன்றே. ஒரு குழந்தையைப் பெற்றபோதி லும் நல்ல குழந்தையைப் பெறவேண்டும் என் பதாயிற்று.

நல்ல குழந்தையை என்பதைத் தான் மூன்று விதமாக "குருபுத்திரன்" என்றும் "கன்றைப்பெறு" என்றும் "நன்றைப் பெற வேண்டும்" என்றும் எடுத்துக் காட்டியதா யிற்று. இதே அருத்தத்தை வடமொழியில் "ஏகசந்தரஸ்தமோ ஹந்தி நசதாரா கணைரபி": சந்திரன் ஒருவனாய் நின்று இருளைப் போக்கு கின்றது. நட்சத்திரக் கூட்டங்கள் ஆயிரக் கணக்காயிருப்பினும் இருளை நீக்கமுடியாமல் விளங்குகின்றன. அதுபோல் நற்குணமுள்ள ஒருபிள்ளை குணமற்ற 100-பிள்ளைகளைக்காட் டிலும் அதிகம். "வரமேகோ குணீபுத்ரோ நசமூர்கசதைரபி"—என்று எடுக்கப்பட்டிருக் கிறது. ஜனங்களுக்கும் 100 மூர்க்கர்களைப் பிள்ளைகளாய்ப் பெறுவதைக் காட்டிலும் ஒரு வித்வானைப் பெற்று சுகமாயிருப்பதில் எப் பொழுதும் ஆனந்தம் அதிகம். இம்மாதிரி யிருந்ததற்கு ஆயிரக்கணக்காய் கதைகள் மார்க்கண்டேயர் சரித்திரம் போன்றவையுள.

(19) ஒருவனாய்ப் பிறப்பது பிறப்பாமா ஓன்றிமரம் தோப்பாமா.

மேலேசொன்ன இந்தப்பழமொழிகளில் நற் குணமுள்ள ஒருவனைப் பெறுவது சிலாக்கியம் என்று எடுத்தபோதிலும் அந்த ஒருவன் கா லத்தின் கொடுமையாற் போய்விட்டால் அப் புறம் தகப்பன் அபுத்திரவானவனாகையாலும் ஒருவனாய்ப் பிறந்த ஒரு பிள்ளைக்கு சகோ தரன் சகோதரி இவர்களின் சகவாசமில்லாத படியால் இவ்வித சகவாசத்தாலுண்டாகும் அநேகவித அருமை பெருமை முதலியவை கள் தெரியாமலிருக்குமாகையாலும் இந்தப் பழமொழியில் தனியாய் நிற்கும் ஒரே ஒரு மரம் எம்மாதிரி தோப்பாகமாட்டாதோ அது போல தனிமையில் ஒருவனாய்ப் பிறப்பவன் உச்சிதமாய்ப் பிறந்தவனாகமாட்டான் என்று எடுத்துப்பேசினார்.

(20) ஒன்றைப் பெற்றாலும் கடுகப்பெற.

ஒருவனுக்கு புத்திர பாக்கியமிருந்தால் அது அவனுக்கு தகுமான வயதில் அதாவது 25, 30-வயதுக்குள் உண்டானால் நன்றாயிருக்கும். எப்படி என்றால் தகப்பன் 50-வயதாகும் போது பிள்ளை 20, 25-வயதாயிருந்து தள் ளாதகாலத்தில் தகப்பனை ரட்சிக்கும். அப்படி யில்லாமல், 60-வயதில் பிள்ளையைப் பெற்றால் அதன் லாபத்தை நாமெப்படி அடையமுடியும். ஆகையாற்றான் ஒன்றைப்பெற்றாலும் கடுக அதாவது சீக்கிரமாகப்பெறு என்று சொன் னார்.

(21) ஒருவனாய்ப் பிறந்தால் தனிமை, இரு வராய்ப் பிறந்தால் பகைமை.

(22) அண்ணனும் தம்பியும் ஜன்மப்பகை வர்.

முன் பழமொழியில் ஒருவனாய்ப் பிறப்பது பிறப்பல்ல என்று சொல்லிவிட்டு, இப்பழ மொழிகளில், எப்படிப் பிறந்தாலும் சங்கடம் வரவேண்டிய துரைகளிருப்பின் சங்கடம் ஒரு வனாய்ப் பிறப்பதிலும் உண்டு, அண்ணன் தம்பிமுதலிய அநேகராய்ப் பிறப்பதிலும்உண்டு என்றார். அது எப்படியென்றால், சில துர்ப் பாக்கிய குடும்பங்களில் அண்ணன் தம்பிமார் கள் எப்பொழுதும் ஒருவர்மேல் ஒருவர் அன்பு பாராட்டி ஆதரித்து சந்தோஷித்து, தாங்க ளும் சௌக்கியமடைந்து,தங்களைப் பெற்றவர் களையும் சௌக்யப்படுத்தி வாழ்ந்திருக்கும் நியாயத்திற்கு பதிலாக, எலி - பூனைகள்போல்

எப்பொழுதும் சச்சரவு செய்து வருவார்கள். இவர்கள் மிருகங்களாகப் பிறக்கவேண்டியது தப்பி மனித சாதிகளாய்ப் பிறந்த சகோதரப் பதர்கள். மிருகங்களில் கூட ஆடு, மாடு முதலிய இனங்கள் ஒத்துவாழ்கின்றன. புலி, கரடி முதலிய காட்டு விலங்குகள்தான் சச்சரவிடும். ஆகையால் இவர்களை துஷ்ட விலங்குகளுக்கே ஒப்பிடல்வேண்டும். சில சமயத்தில் ஒரு தாய் வயிற்றில் பிறந்த இருவர்களில் மூத்தவன் இளையவனைக் கண்டால் சகிக்கான்; அசலகத்துப் பிள்ளையைக் கண்டால் அன்பாய் சிரிப்பு முகத்துடன் பேசுவான். தன்சொந்தத் தம்பியைப் பாத்தால் கடுகடுத்து 'வள்' என்று விழுவான். அன்னியபந்து தன் சமீபத்தில் உட்கார்ந்து புசிக்கக் களிப்பான். தன் சொந்தத் தம்பியை "உன் இலை யிதல்ல, ஓடு அதோ!" என்பான். அன்னியனுக்கு வரும் லாப நஷ்டங்களைக்கண்டு சந்தோஷிப்பான், சஞ்சலப்படுவான். தன் தம்பி எக்கேடு கெட்டாலும் கொஞ்சமேனும் உணரான். அந்தோ! இவனை என்ன செய்யலாம். ஈஸ்வரனிவனுக்கு தகுந்த புத்திமதி கொடுக்கவில்லையே. தன்னுடன் பிறந்தவனை இவ்வளவு பராமதித்தால் இவனை ஒருநாளில்லாவிடில் ஒருநாள் ஈஸ்வரன் தண்டிப்பாரே என்று பரிதபித்து புத்திமதி சொல்லவேண்டியதுதான். இம்மாதிரியிருக்கப்பட்டவர்களை உத்தேசித்து இவ்விரண்டு பழமொழிகள் பிறந்திருக்கின்றன. ஒருவனைப் பிறப்பது பிறப்பல்ல என்று 19-வது பழமொழியில் சொல்லி வாய்மூடும் முன், இருவனைப் பிறந்தால் பகைமை என்று இம்மாதிரி சில துஷ்டப்பிள்ளைகளை உத்தேசித்து 21-வது பழமொழியும் சொல்லலாயிற்று. இம்மாதிரி மனித ரூபத்தைத் தரித்து மிருகங்களாய் வாழும் வாலிபர்களிருக்கும் வீட்டில் அண்ணனும் தம்பியும் ஜென்மப்பகை என்று 22-வது பழமொழி எடுத்துச் சொல்வதும் பொய்யாமா. இவ்விருபழமொழிகளின் கருத்து: இம்மாதிரி துர்க்குணத்தைவிட்டு வாலிபர்கள் இராமலட்சுமணர்கள் போலும், பஞ்சபாண்டவர்கள்போலும் அன்னியோன்னியமாய் வாழவேண்டும் என்பது திண்ணம். பஞ்சபாண்டவர்களில் மூத்தவரான யுதிஷ்டிர மகாராஜா பாரத யுத்தத்தில தன் தம்பிமார்களில் யாராவது ஒருவன் மாண்டால், தான் தன் பிராணனை விட்டுவிடுவதாக சபதம் பண்ணிக்கொண்டார். அதல்லவோ அண்ணன் தம்பி விசுவாசம்! ராமன் காட்டுக்குப் போக அவர் தம்பி தமையனுக்குப் பணிவிடை செய்ய 14-வருஷங்கள் அவருடன் காட்டிற் சென்று வசித்தார். அதல்லவோ சகோதரவாஞ்சை!! இவ்விருவர்களுக்கும் சகோதரனை பரதர் தனக்கு இராஜ்ஜியம் கிடைத்திருக்க ராமனில்லாமல் அயோத்தியில் புகமாட்டேன் என்று சத்தியம் பண்ணி ராமன் பாதக்குரட்டை அவருடைய அத்தாக்ஷியாக வைத்து நந்திகிராமத்தில் மரவுரி பூண்டு 14-வருஷம் ராமன் வருமட்டும் யதியாக வசித்தார். அதல்லவோ அண்ணன் தம்பி நட்பு !!!

(3) சத்தியத்திற்கு இல்லாதபிள்ளை துக்கப்பட்டபோது அழப்போகிறதா?

இப்பழமொழியின் கருத்து தகப்பன் அந்தரங்கத்தையறிந்து அவர்மேல் விஸ்வாசம் வைக்காத பிள்ளையைப் பெற்றதைப்போல் பெருந்துக்கம் வேறில்லை என்பதாம். எப்பொழுது நம்மிடத்தில் அந்தரங்க விஸ்வாசமில்லையோ அவன் நாம் துக்கப்படும்போது ஏன் அழப்போகிறான். ஒரு சொட்டு தண்ணீர்கூட அவன் கண்களினின்று வெளிப்படா. அனுதாபமிராது என்றபடி.

(24) சித்திரை மாதத்தில் செல்வன் பிறந்தால் சீரும் சிறப்பும் கெடும்.

இப்பழமொழியில் சித்திரை மாதத்தில் பிறந்த குழந்தைகள் அவ்வளவு அதிர்ஷ்டமுள்ளவைகளாயிருக்கமாட்டா என்னும் நமது நாட்டார் கொள்கையை எடுத்துச் சொல்லியிருக்கிறது. இதே அருத்தத்தை,

(25) சூரியதசையில் வாழ்ந்தவனு மில்லை, சுக்கிரதசையில் கேட்டவனுமில்லை.

என்ற பழமொழியும் ஒருவாறு எடுத்துரைக்கின்றது. சித்திரை மாதத்தில் சூரிய தசையின் பிறப்பு அதிகம். ஐப்பிசியில் சுக்கிர திசைப் பிறப்பும் அதிகம். இந்தப் பழமொழியில் சித்திரையில் பிறப்பு எவ்வளவு அசிலாக்கியமோ அவ்வளவு சிலாக்கியம் ஐப்பிசியில் பிறப்பு என்று எடுத்துக்காட்டியபடி. இதுதான் சோதிட சாத்திரத்தின் பிரகாரம் உண்மை யென்பர். ஆனால் இதைக்கண்டு ஜனங்கள் அதைரியப்படக் கூடாதென்று இவ்வர்த்தங்களுக்கு நேர் விரோதமாக மற்றொரு பழமொழி,—

(26) சித்திரை மாதத்திற்பிறந்த சீர்கேடனுமில்லை, ஐப்பிசிமாதத்தில் பிறந்த அதிர்ஷடவானுமில்லை.

என்று எடுத்துச் சொல்லுகிறது. இந்த மூதுரை சோதிட சாத்திரம் உண்மை என்று நம்பாதவர்கள் சொல்லியிருக்கும் பழமொழி, மாதத்தில் என்ன விருக்கிறது. ஒருவன் ஒரு மாதத்தில் பிறப்பது தெய்வாயத்தம். அவன் பாக்கியமும் துக்கமும் அவன் செய்யும்காரியங்களால் உண்டாகின்றன என்று தாத்பரியம்.

(27) ஞானமில்லாத சேவலர்கள் ஆவின்கன்றிலும் அதிகமல்ல.

சுலபம். புத்தியில்லாத பிள்ளைகள் பசுவின் கன்றுகளைவிட அதிகமாகமாட்டார்கள். என்றபடி.

(28) தங்கச்சி பிள்ளை தன்பிள்ளையானால் தவத்திற்குப் போவானேன்?

வெகு சரியான பழமொழி. தனக்கு சொந்தப் பிள்ளையில்லாதவர்கள், சமீபபந்துக்கள் அண்ணன் தம்பி அல்லது அக்காள் தங்கை யிவர்கள் பிள்ளையை தத்து எடுத்துக்கொண்டும் அல்லது எடுத்துக்கொள்வதாகச் சொல்லியும் அந்தப்பிள்ளையை தன் பிள்ளையாக பாவிப்பது வழக்கம். இம்மாதிரி ஒரு பக்கம் சொல்லுவார்கள் செய்யவும் செய்வார்கள். மற்றொரு பக்கத்தில் ஒரு சுப்பிரமணியசுவாமிகோவில் கட்டிப் பிரதிஷ்டை செய்தால் தனக்கு ஒரு குழந்தை உண்டாகமாட்டாதா என்று பொருளைச் செலவிடுவார்கள். தன் சொந்தப் பிள்ளையிடமிருக்கும் அன்பு மற்றக் குழந்தைகளிடம் வரமாட்டாதென்றபடி.

(29) தாய்முகம் காணுப்பிள்ளையும் மழைமுகம் காணுப்பயிரும்.

இதன் அருத்தப சுலபம். மழைகாணுப்பயிர் எப்படி வாடுமோ அப்படி தாயன்பில்லாக் குழந்தை மனம்வாடி முகம்வாடி நொந்துபோம் என்றபடி.

(30) தாய்வார்த்தை கேளாத பிள்ளை நாய் வாயிற் சீலை.

நாய் வாயிற் சிக்கின சீலை எப்படி சின்னபின்னமாய் கிழிக்கப்படுமோ அப்படி தனது உலகவாழ்க்கையில் தாய்சொற் கேளாத பிள்ளை அவஸ்தைப்படுவான் என்றபடி. இது திண்ணம். "மாதிருதேவோபவ"—என்ற வேத வாக்யமும் இதைத்தான் கதறுகிறது.

(31) பெற்றதெல்லாம் பிள்ளையா? இட்டதெல்லாம் பயிரா.?

முன்னொரு பழமொழியில் நாம் சொன்ன கருத்தை கவனத்தில் வைத்தால் பெற்றது எல்லாம பிள்ளையாகமாட்டாது; நற்குண நற்செய்கை யுள்ளவர்களே பிள்ளைகள் என்பது நன்ருய் விளங்கலாகும். இதே கருத்தைத்தான் பின்னும்,

(32) பெற்றதெல்லாம் பிள்ளையோ வனைந்ததெல்லாம் குசக்கலமோ.

வனையும் குசக்கலங்களில் எவ்வளவு உடைந்துபோகின்றன! எவ்வளவு கெட்டுப்போகின்றன! அதுபோல கெட்டவர்களைப் பிள்ளைகளாகக் கணக்கிடலாகாது என்று கூறியபடி.

(33) மாதாமனம் எரிய வாழான் ஒருநாளும்.

தன்னை யீன்ற தாயார் மனம் எரியும்படி நடக்கப்பட்டவன் ஒரு நாளும் நல்லவழியில் வாழமாட்டான். வெகு கஷ்டப்படுவான் என்றபடி. இது அவ்வளவும் உண்மை.

(34) மாலைசுற்றி பிறந்த பிள்ளை மாமனுக்கு ஆகாது.

இது இந்துக்களாகிய நமது கொள்கைகளில் ஒன்றை எடுத்துச சொல்லுகிறது. இதனால் உண்டாகும் அரிஷ்டத்தைத் தீர்க்கத்தான் "நாளசாந்தி" என்னும் சடங்கு இம்மாதிரி பிறக்கும் குழந்தைகளுக்குச் செயவது வழக்கம.

## NAVARATRI MAHATMYAM.

### நவராத்திரி மஹாத்மியம்.

மஹாலயபக்ஷம்கழிந்தது. மஹாலய அமாவாசையன்று ஜனங்கள் ஏராளமாய்ச்சென்று சமுத்திரத்தில் ஸ்நானம்செய்து தங்கள் பாபம் தீரப் பிதுர்க்கள் கரையேறத் தர்ப்பணம் செய்து வீட்டுக்குத் திரும்பினார்கள். சனிக்கிழமை இரவு முதல் நவராத்ரி யாரம்பம். வீடுகள்தோறும் தேவி கொலுவிருக்க, குழந்தைகளும் பெண்டிரும் ஆடையாபரண அலங்கிருதராய் சாயங்காலவேளையில் தங்கள் சிநேகிதர்கள் வீடுகள்தோறும் சென்று தங்கள்தோழிகளை கொலுவுக்கழைத்தார்கள். தெருவில் எங்கும் அந்திநேரத்தில் கலியாண வைபவமாயிருந்தது. கோயில்களில் நவராத்ரி உற்சவம் வெகு ஆடம்பரத்தோடு கொண்டாடப்பட்டு வருகிறது. தினந்தோறும் ஜனங்கள் கூட்டம் கூட்டமாய்க் குஞ்சு குழந்தைகளோடு கோவிலுக்குச்சென்று தேவி கொலுவிருக்கும் காட்சியைக்கண்டு ஆனந்தித்து வருகிறார்கள். அந்நியர்களுக்கு நவராத்ரியின் மஹிமை அவ்வளவாகத் தெரியாது. ஆனால் வீடுகள்தோறும் தேவிபூஜை செய்வாரும், தேவிபாகவதம் பாராயணம் செய்வாரும், குழந்தைகள் 'தேவி கொலு'வென்று பொம்மைகளை வைத்து உற்சவம் கொண்டாடுபவராயு மிருப்பதைப் பார்த்துக் கேட்டு அறிந்தவர்கள் நவராத்திரியின் மஹிமையையும் அதனால் ஜனங்களுக்குண்டாகும் மனக்கிளர்ச்சியையும் ஒருவாறு உணரக்கூடும். அவர்களது உள்ளக்கிளர்ச்சியை உள்ளவாறு உணர அவர்களாலும் முடியாது. ஏனெனில், இந்த நவராத்ரி உற்சவத்தில் ஹிந்துக்களின் ஜாதி மதக்கொள்கைகளன்றி, பிரகிருதிவிசேஷமும், ஆசார, அனுஷ்டான, ஸம்பிரதாய விசேஷமும்சேர்ந்து ஜனங்களுடைய உள்ளம், உணர்வு, நடை, உடை, பாவனை, ஆசாரம், அனுஷ்டானம், உண்டிமுதலாக எல்லாவற்றையும் கிளர்ச்சிப்படத் தூக்கி யுற்சாகத்தை யுண்டுபண்ணுகிறது.

ஸ்ரீதேவி பண்டாசுரனை யெதிர்த்து அவனை வதம்செய்து அசுரர்கள் கொட்டம் அடங்க ஆத்ம ரக்ஷணார்த்தம் தான் காமேசுவரியாகக் கொலுவீற்றிருந்து ரதிதேவிக்கு மாங்கல்ய பிக்ஷையளித்த விசேஷத்தைக் கொண்டாடும் காலம் இது.

*    *    *    *    *    *    *

"அவனன்றி யோரணுவும் அசையாது" என்பது மூதுரை. கடவுளுடைய கிருபையின்றி இவ்வுலகம் நடைபெறாது. உலகம் பிரவிருத்தி மார்க்கம் நிவிருத்திமார்க்கம் என இருமார்க்கங்களினால் நடைபெற்று வருகிறது. அது எப்படியென்றால் சொல்கிறேன் கேளுங்கள்:—

அதோ ஓடுகிற நதிப்பிரவாகத்தைப் பாருங்கள். அந்த ஆற்றில் ஓடும் வெள்ளம் எங்கேயிருந்துவந்தது? வானின்று பெய்த மழையாலும் பனியாலும் அந்த நீர்ப்பெருக்குண்டாகி நதிப்பிரவாகமாக ஓடுகிறதென்று உங்களுக்குத் தெரியுமே. ஆனால் வானிலுள்ள மேகங்களுக்கு மழை வருஷிக்கும் சக்தி என்னமாக வுண்டாயிற்று?

"மேகங்கள் சமுத்திரநீரைக்குடித்து மழையாக வருஷிக்கிறது." என்கிறான் ஒரு குழந்தை.

ஆம் அது சரிதான்! ஆனால் மேகங்கள் என்ன, மாடா, மிருகமா, நீர்குடிக்க?

"அண்ணா, அந்த ரகஸியம் எனக்குத்தெரியும். வாத்தியார் "Elementary Science" பாடம் சொல்லும்போது அதன் மர்மத்தை யுணர்த்தினார். கோபு என்ன சொல்கிறான் பார்ப்போம்! அப்புறம் நான் சொல்கிறேன்."

"அடே, கோபு, நீ மேகம் நீர் குடிக்கிறதைப்பார்த்திருக்கிறாயா? சொல் கேட்போம்."

"அண்ணா! நான் கிட்டவிருந்து பார்த்ததில்லை. ஆனால் நான் நீலகிரிக்கு எங்கள் அப்பாவோடுகூடப் போயிருந்தபோது, காட்டெருமை மாதிரி மேகங்கள் ஆகாசத்தில் சஞ்சரித்துக்கொண்டிருக்கப் பார்த்திருக்கிறேன். அவை நீருண்டு கருத்திருந்தபடியால்

"காளமேகம்" என்று அவைக்குப் பேர்வந்தது என்று பாட்டி கதை சொல்லியிருக்கிறாள் எனக்கு."

ஆம் "காளமேகம்" என்றால் "கருத்த மேகம்" என்றுதான் அருத்தம். அந்தமேகம் உண்டாகும் வழி தெரியுமா?

"மேகங்கள் வருணராஜனுடைய சேனைகள் என்று கதைசொல்லக் கேட்டிருக்கிறேன்."

சரி! அந்த வருணராஜன் எங்கேயிருக்கிறார்?

"அவர் சமுத்திரத்திலும் ஆகாசத்திலே மேகமண்டலத்துக் கப்பாலும் இருக்கிறார்."

அப்பா, வருணராஜன் என்றால் ஜலக்கூட்டங்களுக்குத் தலைவன் என்று அர்த்தம். "மனிதர்களில் நான் ராஜாவாயிருக்கிறேன்" என்று பகவான் அர்ச்சுனனுக்குச் சொன்னதின் அருத்தம் ஜனசமஷ்டியெல்லாம் என்னில் அடக்கம் என்பதாம். அதுதான் விசுவரூப தரிசன மஹிமை. அதேமாதிரி ஜலக்கூட்டங்களெல்லாம் அப்பு தன்மாத்ரைமுதல் ஆற்றிலோடும் ஜலம் ஈறாக எல்லாம் வருணனில் அடக்கம். அதுதான் வருணராஜன் என்பதற்கு அர்த்தம். இப்பொழுது ஆற்றிலுள்ள ஜலத்திற்கும் சமுத்திரத்திலுள்ள நீர்நிலைக்கும் சம்பந்தமென்ன தெரிந்ததா?

"நதிகளெல்லாம் சமுத்திரத்தில்போய் சங்கமமாகிறவிஷயம் கண்கூடாகக் காணத்தக்க காட்சியாகவிருக்கிறது. சமுத்திரத்திலிருந்து மேகங்கள் நீரையுண்டு மழையாகவும் பனியாகவும் பெய்து நதிகளுக்கு மூலமாகவுமிருக்கிறது." கண்ணுக்குத் தெரியாவிட்டாலும் சூக்ஷ்மத்தில் உண்மையே.

இதைத்தான் சுருக்கமாகக் கூறும்போது, "நதிகள் சமுத்திரத்திலிருந்து உற்பத்தியாகி சமுத்திரத்திலேபோய் லயிக்கின்றன" என்று சொல்கிறது, தெரிந்ததா?

சமுத்திரஜலம் சூரியகிரணங்களால் கிரகிக்கப்பட்டு நீராவிக் கூட்டங்களாகமாறி "மேகம்" என்கிற நாமரூபங்கொண்டு மழைவருஷம் என்கிற சாதனத்தினால் நதிகளாகி பூமியின் ஆகர்ஷணசக்தியால் இழுக்கப்பட்டு மறுபடியும் சமுத்திரத்தையே போய்ச் சேருகிறது.

அதேபோல, இந்தப் பிரபஞ்சகோடியெல்லாம் பகவானிடத்திலிருந்து உற்பத்தியாகிமறுபடியும் அந்த பகவானிடத்திலேபோய் லயிக்கின்றன. அது எப்படியென்றால், மரத்தால் செய்யப்பட்ட ஒருபெரிய மதயானையானது "மதயானை" என்கிற நாமரூபவிசேஷத்தினால் அதற்கு உபாதி காரணமாகிய மரத்தை மறைத்து, அந்த மரத்தைப்பற்றிய விசாரணை யேற்படும்பொழுது அந்த நாமரூபம் மரத்தில் மறைந்துவிடுகிறது எல்லாருக்கும் ஸ்பஷ்டமாய்த் தெரிகிறதல்லவா! அஃதேபோல், பார்முதலாக ஏற்பட்ட பூதக்கூட்டங்கள் அவைகளின் ஆதிகாரணமாகிய பரத்தை மறைத்தது. அந்த ஆதிகாரணமாகிய பரத்தைப்பற்றிய விசாரணை யேற்பட்டபோது அதிலிருந்துண்டான தத்துவகோடிகளெல்லாம் அந்தப் பரத்தில்தானே ஒடுங்கி மறைந்தன. ஜலமின்றி எப்படி நதியில்லையோ, அப்படிப்போல ஈசுவரன் கருணையின்றி பிரபஞ்சம் நடைபெறுவதில்லை. அதலால்தான் கடவுளுக்குக் "கருணா சமுத்திரம்" என்று பேர்.

* * * * * * *

இந்த கருணைக்கடலாகிய பகவான் கல்லால நீழலில் உட்கார்ந்து சனகாதி நால்வருக்கும் ஞானோபதேசம் செய்துகொண்டிருக்கையில் அவருடைய அசைவற்ற தன்மையைக் காட்ட வேண்டி நிர்விகல்ப சமாதியிலிருந்து ஞானமுத்திரை சாற்றியருளினார். அப்பொழுது பிரபஞ்சமெல்லாம் நிர்விகல்பமடைந்து ஆணொடு பெண் சேராமல் உலகப்பரவிருத்தி நின்றுவிட்டது. இது தேவர்களுக்கு ஆபத்தாகமுடிந்தது. அந்த சமயத்தில் தேவர்களெல்லாம் ஒன்றுகூடி காமனை ஏவிவிட, அவன் தன் புஷ்பபாணத்தைப் பரமேசுவரன்மேல் எய்து அவர் சமாதிநிலைக்கலைத்து காமசேஷ்டையுண்டுபண்ணப் பார்த்தான். அப்பொழுது பரமன் தன் நெற்றிக்கண்ணை (ஞானக்கண்ணை) விழித்துப்பார்க்க காமன் தீப்பட்டெரிந்து

பிடிசாம்பலாகப் போய்விட்டான். அந்த சாம்பலையெடுத்துப்பிடித்து பெரிய பிள்ளையாராகிய விக்னேசுவரர் ஒரு பிம்பமாகச்செய்தார். பரமன் பிள்ளையார் திருவிளையாட்டைக் கடைக்கண்ணால் பார்த்துமகிழ, அவருடைய அமிர்தக்கண் பட்டமாத்திரத்தினாலே அந்தபிம்பம் உயிர்பெற்று எழுந்துவிட்டது. அவன் பண்டைய ரூபங்கொண்டு பரமனிடத்துப் பகை பாராட்டின சித்தனாக விருந்ததனால் அவனுக்கு "பண்டாசுரன்" என்கிற பேர் கிடைத்தது. இவன் தபவிபற்றி ஸ்ரீ தேவியினாலன்றி வேறு யாராலும் தனக்கு மரண ஹிம்ஸை யுண்டாகாதபடி வரம் வாங்கினான். அந்தவரம் பெற்ற கொர்வத்தினால் மமதைகொண்டு திரிலோகங்களையும் தன்வசமாக்கி தேவர்களையெல்லாம் நடுங்கியோடச் செய்தான். அந்த சமயத்தில் தேவர்களெல்லாரும் லோகமாதாவாகிய பரமேசுவரியைக்குறித்து தபஸ்செய்து வரம் கிடக்க அந்த ஸ்ரீமாதா "சித்-அக்னிகுண்ட ஸம்பூதை" யாகக்கிளம்பி "தேவகாரியத்தைச் சாதித்துக்கொடுப்பதற்காக" அவதாரமானாள்.

* * * * * * *

அப்படி யவதாரமான ஸ்ரீதேவி பண்டாஸுரனை வதை செய்யச்செய்த யுத்தம் ஒன்பதுநாள் நடந்தது. ஆதலால்தான் அதற்கு நவராத்ரி யென்றுபேர். 'இராத்ரி' யென்பது மாயாஸஹிதமான தேவிக்கு மாறுபெயர். நவாம்சங்களுடன்கூடிய தேவி பண்டாசுரனை யெதிர்த்து வதம்செய்த யுத்த வைபவத்தைக் கொண்டாடுவது நவராத்திரி யுற்சவமாம். இந்த ஒன்பதுநாள் யுத்தமும் வெகு அற்புதமாயிருக்கும். பத்தாம் நாளாகிய விஜயதசமியிலே தேவி தன்னுடைய ஆயுதங்கள் எதனாலேயும் பண்டாசுரன் மாய்வதாயில்லையென்று கண்டு அன்பேயவனுய் விளங்கும் காமேசுவரனை மனதிற் சிந்தித்து காமேசுவராஸ்திரப் பிரயோகம் செய்ய அதனால் பண்டாசுரன் மடிந்தான். காமேசுவரியும் ஜயபேரிகை முழங்கக்கொலுவீற்றிருப்பாளாயினள். அப்பொழுது ரதிதேவிவந்து புலம்ப, அவளுக்கு அபயங்கொடுத்து காமனை அநங்க ரூபனாகவிருந்து அவள் கண்களுக்குமட்டும் புலப்படுவானாக விருக்கச் செய்து அவளை அகமகிழ்வித்து தான் காமேசுவரரைமணந்து, பார்வதி தேவியாரைவிட்டுப் பிரிந்திருந்த பரமேசுவரனை அவருடன் கூட்டிவைக்க மன்மதனுக்கு மறுபடியும் தன்னுடைய வரப்பிரஸாதமளித்து குமார ஸம்பவத்துக்குக் காரணமாக பார்வதி பரமேசுவரைக்கியம் உண்டாக அவர்களிருவருக்கும் கலியாணம் செய்துவைக்கக் காரணமானாள். இது தான் தேவகாரியத்தைச் சாதித்துக்கொடுத்தது.

* * * * * *

அப்படி உற்பத்தியான சண்டை நடக்கிற நாலாம்இரவு ஜர்மன்கப்பல் ஒன்று, "எம்டன்" என்னும் பேருடையது, எப்படியோ வங்காளக் குடாக்கடலில் வந்து நுழைந்துகொண்டு,

"கல்லுளிமுண்டன் போற'வழி
கதவுகிதவெல்லாம் தவிடுபிடி."

யென்கிற கதையாக த்வம்ஸம் செய்துகொண்டு சென்னைக்கு வந்து சேர்ந்தது. ஒரு வாரம் 10-நாளைக்கு முன்பு இந்த எம்டன் என்னும் ஜர்மன் கப்பல் (Cruiser) ஜெகந்நாதம் என்கிற புரிநகருக்கு எதிரில் 5-கப்பல்களைப் பிடித்து அவைகளை உடைத்துத் தகர்த்து மூழ்க அடித்துவிட்டது. இரங்கூனுக்குப் போகிறவழியில் மற்றொரு கப்பலைப்பிடித்துக் கொள்ளை யடித்துவிட்டது. இவ்வளவுசெய்தும் அதன் கொட்டத்தை யடக்குவாரின்றி அது வங்காளாக்குடாக்கடலில் காட்டு ராஜாவாகத் திரிந்துகொண்டிருந்தது. போகிறபோக்கில் செவ்வாய்க்கிழமையன்று இராத்திரி சென்னைத் துறைமுகப் பக்கம்வந்து அது ஒரு பிரிடிஷ் காவல்கப்பல் என்றும் அதன்பேர் 'நியூ காஸில்' என்றும் மாறாட்டமாக 'ஸிக்னல்' (குறி) காட்டி 'கடலில் பயமில்லை' யென்கிற அபயமும் கொடுத்துவிட்டு, துறைமுகத்துக்குத் தெற்கேசென்று 7000 கஜ தூரத்திலிருந்து 30-40 குண்டுகளைவிட்டுப் பட்டணத்தைத் தகர்க்கமுயன்று எல்லாரையும் பயத்துக் குள்

படுத்திவிட்டதன்றி மூன்றுபேர்களுக்கு உயிர்ச்சேதமும் 16-பேர்களுக்குக் காயமும் உண்டுபண்ணி 3-லக்ஷம் ரூபாய்க்குச் சேதமும் விளைத்துப்போய்விட்டது.

சீதாதேவி ஸ்ரீராமருடைய சந்தேகம் தீர்க்கத் தீக்குளித்தெழுந்ததுபோல், சென்னைமாதேவியும் ப்ரிடிஷ் சாதியார் சந்தேகம்தீர இந்த மஹாபாரத யுத்தத்தில் தீக்குளித்தெழுந்தாள் போலும் 3-உயிர்களைக்கொடுத்து 3-லக்ஷத்துச் சொச்சம் நஷ்டமும்பட்டுத் தீக்குளித்தெழுந்தாள்.

இந்தக்கதையை நேரில்கண்டு கேட்டவர்களும், வாசிக்கக் கேட்டவர்களும் ஸ்ரீதேவியின் விளையாட்டில் இதுவுமொன்றென்று லலிதாசோபனம் பாடிப் பயம் நீங்கி அபயவரதம்பெற்று ஆபத்துக் கஞ்சாதநெஞ்சம் படைத்தவர்களாய் தைரியசாலிகளாயிருந் துய் வாரானார்கள். இக்கதையைக்கண்டது, கேட்டது, உள்ளது உள்ளபடி உண்மையாய் எழுதலானேம். குழந்தைகளே பிக்ஷடனர் பாடின பாட்டு ஞாபகத்திலிருக்கிறதா ?

"தர்மமே ஜயமென்ற பிக்ஷை கேட்டேன்
தரணியிலே கலிமுற்றும் காலமாச்சு
பரணியிலே அதிஷ்டானம் கூடலாச்சு
அரணியிலே அக்னியும் தோன்றலாச்சு,
ஆன்மாக்கள் ஈடேறும் மார்க்கம் கேண்மின்:—
"ஆசை யறுமின்கள் ஆசை யறுமின்கள்
ஈசனேடாயினும் ஆசையறுமின்கள்
மாசுபடிந்த மனத்தினுறவறுமின்கள்
துசுபடிந்த தபசிலன்தய வையரவினுறவெனவே
கண்டஞ்சியோடிப்பிழைமின், பிழைமின் குழையீரே"

அதர்ம அக்கிரமங்களுக்கு அஞ்சியோடிப் பிழைக்க வேண்டுமேயன்றி வெடிகுண்டிற்கும் பிடிசண்டைக்கும் ஓடிப்பிழைக்க வேண்டியதில்லை. இருந்த இடத்திலிருந்து ஒருகை பார்த்தால் வந்ததுவரட்டும். என்று தீரமாயிருப்பதே ஆண்தன்மைகழகு. வருவனவந்தே தீருமானலும் தைரியத்தைக் கைவிடலாகாது. தைரியமிருந்தால் எல்லாவற்றையும் வென்று வீரக்கொடிகட்டிப் பிழைக்கலாம். இதுவே மனுஷத்தனம். மற்றப்படி பயந்தோடுவது பேடித்தனம். இதை யெல்லாரும் இச்சமயம் அறிந்து பிழைக்கவேண்டும். கோழை மனதைப்போல் குடிகெடுக்கும் பகைவேறில்லை.

ஆனந்தஹ்ஸி கன்யாமீ (நவராத்ரி) மஹாநவமி. } இப்படிக்கு, உங்கள் அன்புள்ள குட்டியண்ணு.

### * TRANSFUSION COLUMN.

["If a combined, honest and sustained effort is made to *transfuse* (not merely *translate*) good English... into Tamil, the effect will be to assist and stimulate greatly the study of both languages."—*Dr. G. U. Pope.*]

## மொழிப்பெயர்ப்பு வித்தை.

(1) "எண்ணும் எழுத்தும் கண்ணெனத் தகும்."

Thought and Language are the very eyes (*i.e.*, true expressions) of the soul.

(2) "விண்ணவனை நண்ணினர்க் கெண்ணமெல்லாம் கண்ணகும்."

"The thoughts of those that have approached *the Light.*
Are all transformed into *visions bright.*"

---

THE CIVIC IDEAL OR "THE GREAT CITY."

Where the city of the cleanliness of the sexes stands.
Where the city of the healthiest fathers stands.
Where the city of the best-bodied mothers stands.
There the Great City stands.
A Great City is that which has the greatest men and women.
—Walt Whitman.

---

## ப்ரஹ்மபுரம் எங்கே?

தர்மபுரமெங்கேயோ அங்கே காண் ப்ரஹ்மபுரம்
தர்மபுரம் என்பதுவும் சதிபதிகள் தூயமனம் [மாவான்
சதிபதிகள் தூய்மையினல் அய்யன் அப்பன் சுக கன
சதிபதிகள் தூய்மையினல் அம்மையுடல் பலமடையும்
அம்மையப்பன் சதிபதியாய் தர்மம் தலைகாக்குமிடம்
செம்மையாகஎங்கேயுண்டேஅங்கேயுண்டுப்ரஹ்மபுரம்
ப்ரஹ்மபுரம் என்பதுவும் மஹத்துக்களாம் ஸ்ரீபுருஷர்
அஹத்தூய்மை குறையாமல் அன்பில்வாழும் இடமே
இவ்விதமாயுள்ளவிடம் எங்கேயுண்டோ [யாம்!
அங்கேயுண்டு நிச்சயமாய் "ப்ரஹ்மபுரம்"
என்று சொல்லும் பெரிய புகழ்மாநகரம்.

* "No exercise of faculty is better and nobler for *a real* man than that of struggling with great thoughts, and labouring to express them in such a way that they shall reach the heart, instruct the mind, stimulate the rest feelings, and elevate the whole being of their know men around them!"—*Rev. Dr. G. U. Pope* on the 'Vivakachintamani Series."

## THE FALL OF ANTWERP.

"TRAGEDY OF BELGIUM."

"The Main British and Belgian Force with King Albert has reached Ostend safely. Refugees state that King Albert is wearing his arm in a sling."-*Cablegram from London, October* 11, 6-40 A.M.

A German communique says :—"Antwerp was evacuated by the British and Belgians before the Germans entered it. Pourparlers for surrender were conducted with the Burgomaster."—C*ablegram from Amsterdam, October* 11, 12-20 P.M.

"TRAGRDY OF BELGIUM."

"King Albert has good reason to be proud of the heroic achievements of his people. But never was there a ruler less intoxicuted by the pomp and circumstaoce of war. Never was there a pacifist more deadly moved by the horrors of "civilised warfare."

He impressed me as overwhelmed by the agony and anguish of martyred Belgium. His anxious sympathy for the suffering of his people was reflected in his every word and expression. It had been decreed one hundred years after Waterloo that Belgium should have become once more the battlefield of nations. It had been decreed that millions of soldiers should ravage her territory, sack her villages, destroy her cities.

What will remain, the King exclaimed in despair, of Belgium's thriving industries, of her commerce so laboriously built up ? Brussels and Liege and Namur in the power of the enemy, Malines, Louvain, Aerscht destroyed, the whole of the territory given over to plunder—what will remain of my sorely tried country ? And what further excesses will these barbarians be guilty of maddened by the stubborn resistance of our gallant army ? When victory finally decides in our favour what wreckage will have accumulated ? If the Germans were to continue their depredations for a few more months the country would be a desert."—*Dr. Charles Savolea in the Daily Chronicle.*

## ஆன்ட்வெர்ப் பிடிபட்டது.

பெல்ஜியத்தின் பிரலாப ஸ்திதி.

ஆன்ட்வெர்ப் நகரம் ஜர்மானியர் கையில் விழுந்துவிட்டது. அதைக்காத்துவந்த பிரிடிஷ், பெல்ஜியன் சைனியங்கள் கோட்டை பிடிபடும் என்பது தெரிந்ததும், எண்ணெய்க் கிடங்குகள், தானியக் களஞ்சியங்கள் எல்லாவற்றிற்கும் நெருப்புவைத்துக் கொளுத்திவிட்டு கரைதுறைப்பட்டணமாகிய ஆஸ்டெண்ட் வந்துசேர்ந்து விட்டார்கள். பெல்ஜியர்களின் ராஜஸிஹ்மமாகிய ஆல்பர்ட் அரசர் கடைசிவரையில் கோட்டைக்குள்ளிருந்து நகரத்தைக் காக்கவேண்டிய முயற்சியெல்லாம் செய்து இனி அங்கிருப்பது சாத்தியமில்லையென்று கண்டபின் ஆஸ்டெண்ட் துறைமுகப்பட்டணத்துக்கு வந்துவிட்டார்.

இரணவீரசிங்கம் என்னும் பேர் ஆல்பர்ட் அரசருக்கு நன்றாய்ப் பொருந்தும். அவர் வயதில் குறைந்தவராயினும் மதியிலும் தீரத்திலும் இராணுவ சாமர்த்தியத்திலும் நிறைந்தவராகவிருக்கிறார். ஜெர்மனியின் சூழ்ச்சி பலிக்காமற்போனது அவர் ஒருவராலேதான் என்று சொல்லவேண்டும். சண்டை யாரம்பிக்க 18-மாதங்கள் முந்தியே ஒரு பெரிய யுத்தத்திற்கு அடிப்போட்டு வருகிற சமாசாரம் அவருக்கு இரகஸியமாய்த் தெரியவந்தது. மதியூகியாதலால் உடனே தனது இராஜ்யத்துப் பார்லிமெண்ட் சபைமெம்பர்களைக் கூட்டி இரகஸியமாக ஒரு சபைவைத்துக்கொண்டு ஜெர்மானியர்களுடைய சித்தப் போக்கைத் தெரிவித்து பெல்ஜியம் எல்லைப் புறத்திலுள்ள கோட்டைகளையெல்லாம் பலப்படுத்தி இராணுவங்களையும் சீர்ப்படுத்திவந்தார். இது 1912௵ நவம்பர் மாசத்தில் நடந்தது. அவருடைய பெருமுயற்சியாலும் மதியூகத்தாலும் ஜனப்பிரதிநிதிகளுக்கு அவரிடத்திலுள்ள பெருநம்பிக்கையாலுமே சமுத்திரம்போல்திரண்டுவந்த ஜெர்மன் சைனியங்களை லீஜ், நாமூர் தாண்டவிடாமல் இரண்டுவாரம் வரையில் நன்றாகத் தடுத்து நிறுத்துவது சாத்தியமாயிற்று.

அவர்மட்டும் மதியூகத்தோடும் முன்யோசனை யோடும் "வருமுன்காப்பேபோன்" கதையாக வேண்டிய ஏற்பாடுகள் செய்து அவற்றையும் வெளிவிடாமல் இரகஸியமாகக் காப்பாற்றி வந்திருக்காவிட்டால், ஜெர்மன் சைனியங்கள் இத்தனைகாலம் பிரான்ஸில் நுழைந்து அத்தேசத்தைப்பிடித்துக்கொண்டு அடுத்ததேசங்களையும் "உங்கள்செய்தி யென்ன?" என்று கேட்டிருப்பார்கள். இரணவீர சிங்கமாகிய ஆல்பர்ட் அரசருடைய மதியூக விசேஷத்தாலும் தன் தேசத்துப் பிரஜைகளைத் தன்னுடைய அன்பும் ஆதரவும் நிறைந்த நடத்தைகளால் தன் வசப்படுத்தி அரசும் குடியும் ஒருமனப்பட்டுழைப்பது சாத்தியமாகச் செய்திராவிட்டால், பெல்ஜியம் தேசத்து அரசர்க்குரிய குடி, படை, அரண், நாடுநகரங்களெல்லாம் இப்படி வீராவேசங்கொண்டு, மஹாபிரளயம்போல் வந்து தாக்கிய ஜெர்மன் சைனியங்களை யெதிர்த்து, வெள்ளத்துக்கு அணைகோலினாற்போல் அவர்களுடைய ஆரவாரம் அடங்கவும், அவர்களுடைய மனோரதமும் முன்யோஜனையோடு அவர்கள் செய்த ஏற்பாடும் பயன்படாது போகவும் செய்த அற்புத வீரச்செயல்கள் பிரயோஜனப் படாதொழிந்திருக்கும்.

ஜெனரல் லீமான் பிடிபட்டபொழுது அந்தச் சமாசாரத்தைக் கேட்ட நமக்கு கண்ணில் நீர் தளும்பியது. அவருடைய சுத்தவீரச் செயல்கள் மஹா அற்புதமாயிருந்தன. ஆனாலும் இரண்டேகுண்டுகள் வெடிதீர்ப்பதினால் ஒரு கோட்டை முழுவதையும் இடித்து ஹதம் செய்துவிடத் திறம்வாய்ந்த பீரங்கிகளை யெதிர்த்துநிற்க எந்தமனிதனால்தான் முடியும்? ஜெர்மானியர்கள் க்ருப் செய்த முற்றுகை பீரங்கி யென்று ஒருவகைப் பெரிய பீரங்கி செய்திருக்கிறார்கள். அது இதுவரையில் செய்திராத அற்புத பீரங்கி. சைனிய பலத்தினால் பிடிக்கமுடியாத லீஜ் கோட்டைகளைத் தகர்க்க வென்று அந்த மஹாபெரிய பீரங்கியைக் கொண்டுவந்து நாட்டினார்கள். அதைத் தரையில் இழுப்பது சாத்தியமின்றி ரயில் தண்டவாளம் போட்டு அதன்மேல் இழுத்துக் கொண்டுபோக வேண்டியதாக விருக்கிறதாம். அவ்வளவு கனமுள்ளது. அந்தப் பெரிய பீரங்கியினால் நாலுகுண்டு போட்டார்களாம். அதில் இரண்டு குறிதப்பிப் போய்விட்டது. மற்றிரண்டு குண்டுகளும் கோட்டையை யிடித்துத் தகர்த்து நிர்த்தூளி பண்ணும் வேலையைச் செய்துமுடித்துவிட்டன. இப்படிப் பட்ட பீரங்கிக்கு எதிரே எந்த சைனியம், எந்தக் கோட்டைதான் நிற்கமுடியும்! இராவணன் தன்புஜபலத்தால் கைலாஸ பருவதத்தை வேரோடு பிடுங்கித் தூக்கினதாகப் புராணங்கள் சொல்லக் கேட்டிருக்கிறோம். அவ்வளவு பலமுள்ள அவனும் சாதாரண பீரங்கிகளுடைய குண்டுகளா லெல்லாம் தகர்க்கப்படாத மஹாபலமுடையதாய்க் கட்டிய வலுத்தகோட்டையை, இரண்டு குண்டினால் 5-நிமிஷத்தில்முற்றும் நிர்த்துளியாக்கிய இந்த பீரங்கிகளைப்போல், ஒரு கோட்டையை நெறித்துத் தகர்த்ததாகக் கேட்டதில்லை.

புஜபலத்தால் ஆகாத காரியத்தை ரத,கஜ, துரக, பதாதிகளென்கிற படைகள் எவற்றாலும் முடியாதென்றுகண்டு, அற்புதவலியுடைய கோடியானை பலமுடைய பீரங்கிகளைக் கொண்டு தகர்த்து விடுவதாகத் துணிந்துவிட்டால் அப்புறம் மனுஷப் பிரயத்னத்தால் ஆவதென்ன விருக்கிறது. ஆன்ட்வெர்ப் முற்றுகையில் இதிலும் பெரிய 17-அங்குல குண்டு வெடி தீர்க்கக்கூடிய பீரங்கிகளை யுபயோகித்தார்களாம். இப்படிப்பட்ட இராக்ஷஸபலத்தை மனுஷபலத்தால் எதிர்ப்பது அசாத்தியமே. தெய்வபலத்தினால் தான் எதிர்க்க வேண்டும். தெய்வபலம் பூரணமாக ஸித்திக்க தெய்வத்தினிடத்தில் இருக்கவேண்டிய பக்தியும் நம்பிக்கையும்தான் குறைவாயிருக்கிறது. பூரணபக்தியுண்டானால் சாணிக்கியனைப்போல், ஒருவன் தான் நிராயுதபாணியாகவிருந்துகொண்டே, இவ்வளவு இராக்ஷஸ பலத்தையும், தன் கையைக்கொண்டே தன் கண்ணைக் குத்துவதுபோல், அதற்கதுவே

யெதிராக மிற்கத் தந்திரமாய் முடுக்கிவிட்டு "அஹம்பாவத்தாலே யழிந்தான் துரியோதனன்" என்றதுபோல, அவர்களுடைய அஹம்பாவச் செறுக்கைக்கொண்டே அவர்களுடைய இராக்ஷஸ பலத்தைக் குலைத்து நாசமாக்கலாம். அதற்கு அஹம்பாவத்தை வென்றவருடைய மதியூக சாதகமும் அவர் வாக்கை குருவாக்காகக்கொண்டு மதித்து நடக்கும் அரச சிங்கமும் வேண்டும். பெல்ஜியம் தேசத்து ராஜஸிம்ஹமாகிய ஆல்பர்ட் அரசர் அர்ச்சுனனைப்போலவே பரிபக்குவம் வாய்ந்தவராக விருக்கிறார்: அவரைக்கொண்டே பகவான் இம்மஹா பெரிய பார்-ஹத யுத்தத்தை நடத்தத் திருவுளம்கொண்டார் போலும் தோற்றுகிறது. "அவர்தான் நாடு நகரெல்லா மிழந்து ஏதோ ஊனம்பட்டு கையைத்தூளியில் தொங்கவிட்டுக்கொண்டு, ஆஸ்டெண்ட பட்டணம் வந்திருக்கிறாரே! பகவான் கிருபை செய்வது நன்றாகவிருக்கிறது!" என்று சிலர் லேசாகப்பேசலாம். கடவுளுடைய திருவுளத்தை யறிவது இந்தப் பேய்மானிகள் சொல்வதைப்போல் அவ்வளவு எளிதல்ல. அவருடைய எல்லாம்வல்ல சக்தியின் குணமும் மஹிமையும் எளிதில் உணரத்தக்கதல்ல. மக்கள், தேவர், நரகர் எல்லாருள்ளத்திலும் அவர் அந்தர்யாமியாக விருக்கிறவர்: ஆதலால் அவருக்கு அவரவர்கள் அந்தக்கரணசுத்தத்தை யறிந்து படியளப்பது நமக்குத் தோன்றுவதுபோல் அவ்வளவு அஸாத்தியமான காரியமில்லை. இம்மி குறையாமலும் ஏறாமலும் எல்லாருக்கும் ஸரிஸமமாய்ப் படியளக்கும் சக்தி யவருக்குண்டு. அவருடைய மஹாசக்தி பண்டாசுரனை யெதிர்த்து அவன் சைன்யங்களை யெல்லாம் ஹதம் செய்தும் அவனை வதம் செய்ய முடியாமல்தயங்கிற்று. பராசக்தியே, இப்படி தன்னாலாகாத காரியமும் ஒன்றுளதென்றுணர்ந்து பகவானைச் சிந்தித்துத் திருவுளத்திருத்திக் காமேசுவராஸ்திரம் ஒன்றினல் மட்டுமே பண்டாசுரனை வெல்வது சாத்தியமென்று கண்டாரானல் அவருடைய சிருஷ்டியம்சமாகிய மனிதனுடையசக்தியாலாவதென்ன விருக்கிறது?

"அவனன்றி யோரணுவும் அசையாது"

என்பதை இக்காலத்தோர் கலியுக தர்மத்திலும் அது உண்மையென்றுணரல் வேண்டும். அப்பொழுது தான் (Crass Materialism) என்று சொல்கிற கேவலம் லோகாயிதமாயுள்ளமதம் குன்றி தெய்வசிந்தனையும் தெய்வபக்தியும் உண்டாக அனுகூலம் பிறக்கும். அதுவரையில் எல்லாரும் கர்மபலனை யனுபவித்தே தீரல் வேண்டும். "வர்மமப்பா வெல்வதில்லை, வாயாலொன்றுமாவதில்லை" யென்னும் அருள்வாக்கின் உண்மையை உலகத்தோர் உணர்ந்துய்ய வேண்டும். "அரசனெவ்வழி குடிகளவ்வழி" யென்பது மனுஷதர்மமாதலால், உலகத்திலுள்ள அரசர்களெல்லாம் அஹச்செறுக்கடைந்து மமதைகொண்டிருப்பது சரியல்லவென்று பகவான் திருவுளம் பற்றினதுபோலும் தோன்றுகிறது. பராசக்தி பலமெல்லாம் அவள் அன்புருவாயிருப்பதிலிருக்கிறதே யன்றி வேறெதிலுமில்லை. "ஏகைவசக்தி" யென்றபடி பராசக்தியொன்றேயானாலும், "பிரயோஜனார்த்தம்" அந்த சக்தி "சதிர்விதாபூத்"—நாலு விதத்திலும் பிரவர்த்தித்து போககாரணமாகவும், புருஷகாரணமாகவும், குரோதகாரணமாகவும், ஸமர்-யுத்தகாரணமாகவுமிருந்து பகவத் சங்கல்பத்தை நிறைவேற்றி வைக்கிறாள்.

"அவளன்புக் கோரளவில்லை
அருளுக்கோர் குறைவில்லை
அடுத்தாற் கெடுப்பதில்லை
அவமதித்தாற் தொடுவதில்லை
'அன்பர்க்கன்பான மெய்யளவள்' செய்யும்
அற்புதலீலைகளையென்சொல்வேன் தோழி!"

யென்று பாடியிருக்கிறார் ஸ்வானுபவச் செல்வர்களான பெரியோர்களும்.

"அன்பர்க்கன்பான மெய்யளவள்" ஆகையினாலே, அவளிடத்து பக்தி சிரத்தையுள்ள பெல்ஜியம் தேசத்து ஆல்பர்ட் அரசரை அவள் கை

சோர விட்டுவிடமாட்டாள். இதற்கு அத்தாக்ஷி வேண்டுமெனில் அந்த அரசசிங்கத்தின் திருவுளமே சாக்ஷி. அவர் ஆன்ட்வெர்ப் நகரில் முற்றுகை போடப்பட்டிருக்கும் பொழுது, ஒரு பத்திரிகையின் நிரூபர் எழுதிய புஸ்தகமொன்றைப் படித்துவிட்டு அவர் ஆன்ட்வெர்ப் நகருள் தானே யுத்த-நிரூபராக விருக்கிறாரென்றுணர்ந்து அவரை வரவழைத்து அவருடன் தன் உள்ளத்தை விண்டு ஒரு மணி நேரம் பேசிக் கொண்டிருந்தாராம். அரசர் வெளியிட்ட அந்தரங்க விஷயங்களையெல்லாம் அவர் வெளியிடுவது சாத்தியமில்லையானாலும் அவர் ஆல்பர்ட் அரசரின் மனோநிலை விளங்க வேண்டியமட்டும் எழுதி அவருடைய பத்திரிகைக்கனுப்பி யிருக்கிறார். அந்த பாகத்தை இதன்முகட்டில் எடுத்து அச்சிட்டிருக்கிறோம். அதிலிருந்து அவர் தம் குடி-படை-யரண் நாடுநகரெல்லாம் சிதைந்து பாழாயிற்றென்று என்னதான் துக்கித்தாலும் இவ்வளவு கஷ்ட நஷ்டங்களாலும் சிறிதேனும் உள்ளமுடைந்தவராகக் காட்டவில்லை. அதுதான் அவருடைய உள்ளப்போக்கைக் காட்டுகிறது. இதுவரையில் அவரை "இரண வீரஸிம்ஹம்" என்றுன்னி மதித்துவந்தோம். இப்பொழுது அவர் இரணகளத்தில் காட்டிய வீரத்திலும் தர்மமேஜயமென்கிற மெய்யுணர்வில் ஊன்றிய தீரம் பெரிதாயிருக்கிறது. வீராதிவீரனிலும் தீராதிதீரன் பெரியவன். அவரது உள்ளமுணர்ந்து கைப்பற்றிய தீரம் வீண் போகாது. "கடவுளை நம்பினார் கைவிடப் படார்." யுத்தகளத்தில் நடக்கும் மெய்ச்சண்டையிலும், தந்திமூலமாக நடக்கும் பொய்ச்சண்டை பெரிதாகவிருக்கிறது. திரிநேத்திர பாக்கியம் இல்லாத ஜனங்கள் தந்தி மூலமாய் வரும் சமாசாரங்களில் பொய்யெது மெய்யெதுவென்று ஆய்ந்தெடுத்துத் தேறச் சக்தியற்றவர்களாயிருக்கிறார்கள். ஆல்பர்ட் அரசர் அர்ச்சுனனைப்போல் தெய்வபக்தியுடைய வராதல்பற்றியும் அவர் உள்ளத்துணர்வில் தெய்வபக்தியும் அதன்மூலமாய் ஸித்திக்கும் பகவத் கடாக்ஷவீக்ஷண்யமும் இருப்பது நிச்சயமாகத் தெரியவந்திருப்பதாலும் அவருள்ளம் பொய்க்காது என்கிற தீரம்கொண்டு கடைசியில் எப்படியும் "தர்மமேஜயம்" என்கிற ஜயக்கொடி நாட்டப்பெறும் என்று உறுதியாய் நம்பியிருக்கிறோம். இவ்வளவுதான் சொல்லலாம். இதற்குமேல் எழுதக் கையோடவில்லை, மனதும் பெல்ஜியர் அரசன்படும் துயரத்திலாழ்ந்து அர்ச்சுனனைப்போல் அவரடைந்த சோகத்திலீடுபட்டுச் சிந்தனையொழிந்து கிடக்கின்றது. இதுவரையில் "அர்ச்சுன விஷாத யோகம்" என்கிற முதல் அத்தியாயத்துக்குச்சரியாக "ஆல்பர்ட் விஷாதயோகம்" என்றுசொல்லும் பெல்ஜியர்கள் அரசன் சோகமடைந்த கட்டம் வரையில்தான் சண்டை நடந்திருக்கிறது. இனி என்ன நடக்கப்போகிறதோ அதை "ஸஞ்சயன்" போல் யார் சொல்லப் போகிறார்களென்று அஹக்கண் குருடான உலக ஜனங்கள் திருதராஷ்டிரனைப்போல் காத்துக்கொண்டிருக்கிறார்கள்.

முன்னம் "கடவுளை நம்பினாரைக்" கட்டையில் கட்டியெரித்து ஹிம்ஸித்தார்கள். இப்பொழுது கடவுளையே கட்டையில் கட்டியெரிக்கத் தயாரா யிருக்கிறார்கள் போலும் லௌகிக சித்தம் மதர்த்திருக்கிறது. கட்டையென்பது ஜடப்பொருள். கட்டையில் கட்டியெரிக்கும் எரி தீயின் ஜ்வாலைதான் (Crass Materialism) கேவலம் லோகாயதசித்த பாவனையாக உலகைப் பற்றிச் சுட்டெரிக்கிறது. இதெல்லாம் கடவுள்செய்யும் லீலையாக விருக்கிறது! முன் அரசர்கள் க்ஷத்திரியதர்மத்தையனுசரித்து அவர்கள் மட்டில்சண்டைபோட்டு யார்ஜயித்தாலும் குடிகளைக்காத்துவந்தார்கள். இப்பொழுதுகலிகாலமஹத்துவத்தால் வருணாசிரமதர்மம் மாறுபட்டு எங்கும் "குடியரசு" பாவம் மிகுந்திருப்பதால் குடிகளும் சண்டையினாலுண்டாகும் கொடுமைகளை யனுபவிக்கிறார்கள். யுத்தகளத்தில் படும் துயரைவிட தூரவிருந்து யுத்தசமாசாரங்களைக் கேட்பவர்கள் துயரம் பெரியதாயிருக்கிறது. ஏனெனில் அவர்களுக்கு "யுத்தாவேசம்" என்கிற யுத்தஜ்வரம்பிடிக்காததினால் என்கலாம். யுத்தபைத்தியம் பிடிக்காதவர்கள் (depression) என்கிற சைத்திய ஜ்வரம்கண்டு வருந்துகிறார்கள்.

## MADRAS AND THE WAR.

(By A School boy.)

## சென்னைமாநகரும் யுத்தமும்

(ஒரு பள்ளிப்பையன் எழுதியது.)

சென்னைமா நகரவாசிகள் யுத்தத்தில் காயம் பட்டவர்களுக்கும், அவர்கள் குடும்பங்களுக்கும் தங்களாலியன்றமட்டும் பணவுதவிசெய்தும் கூட்டங்கள்கூடி தங்கள் ராஜபக்தியை வெளியிட்டும் தாங்கள் இச்சண்டை காலத்தில் அதன்கஷ்ட நிஷ்டூரங்களைப் பொறுத்துக்கொண்டு அரசாங்கத்தாருக்கு உதவிசெய்ய ஆபத்தர்களாயிருப்பதை வெளியிட்டார்கள். அரசாங்கத்தாரும் இந்தியர்களுடைய ராஜ பக்தியைக்கண்டு சந்தோஷமடைந்தார்கள்.

சண்டை நடக்குமிடங்களில் எப்படி ஜனங்கள் ஊரைவிட்டு ஓடினார்களென்றும், அவர்கள்வீடுகள் கொளுத்தப்பட்டதென்றும், நாம் பேபர்களில் படிக்கிறோம். நாம்நேரில் அந்தக்ஷ்டங்களைக்கண்டனுபவிக்க வேண்டுமென்று ஈசுவரன் கிருபை கூர்ந்தாப்போல், சென்னைமா நகரானது செப்டம்பர்மாதம் 22-ந்தேதி செவ்வாய்க்கிழமை ராத்திரி ஒன்பதரை மணிக்கு "எம்டன்" என்னும் ஜர்மனி சண்டை கப்பலால் தாக்கப்பட்டது. "எம்டன்" என்னும் ஜர்மனி சண்டைக்கப்பலானது இன்னொரு கப்பலோடுகூட வங்காளக் குடாக்கடலில் வந்து நுழைந்துக்கொண்டு ஸ்வதேசம் திரும்பிப் போகமுடியாமல் அவதிப்படுகிறது. அது இங்கிலீஷ் சண்டைக்கப்பலால் பிடிக்கப்படுமென்பதற்கு சந்தேகமில்லை. இது நிச்சயமாய்த்தெரிந்த "எம்டன்" கப்பலானது தன்னால் எவ்வளவுமட்டும் த்வம்ஸம் செய்ய முடியுமோ அவ்வளவு மட்டும் த்வம்ஸம் செய்கிறது. அதனுடைய விஷமங்களினால் ஜனங்கள் பீதியை யடைகிறார்கள். கப்பல் கூட்டங்களிலிருந்து அகஸ்மாத்தாய் பிரிந்து எதிரியின் கடலில் அகப்பட்டுக்கொண்டு தனக்கு மரணம் நிச்சயமென்று தெரிந்த ஒரு கப்பல் தான் சாவதற்குமுன் தன்னால் முடிந்தமட்டும் எதிரிக்கு கெடுதல் விளைவிப்போமென்று விளைவித்தால் அதனால் பீதியடையலாமா! சாகத்துணிந்தவனுக்கு சமுத்திரஜலம் முழங்கால்மட்டும் என்று கேள்விப்பட்டதில்லையா? இந்த எம்டன், கல்கத்தாவுக்கருகில் ஆறுவர்த்தகக் கப்பல்களை முழுக அடித்தது. பிறகு சென்னைத் துறைமுகம் வந்து பிரிட்டிஷ் கப்பலாகிய "நியூகாஸில்" என்னும் கப்பலின் கொடியை பறக்கவிட்டுக்கொண்டு தான் வங்காளக்குடாக்கடலை ரக்ஷிக்க வந்த பிரிட்டிஷ் கப்பலென்றுசொல்லி, "வங்காள குடாக்கடலில் அபாயமில்லை" என்று சமாசாரம் சொல்லிவிட்டு ராத்திரியில் நகரைத் தகர்த்தது. 22-ந்தேதி ஒன்பதரைமணிக்கு திடீரென்று குண்டுகேட்டது. பிறகு சுமார் இருபதுஜோடி குண்டுகள் ஒன்றின்பின் ஒன்றாக்ககேட்டன. ஜனங்கள் பீதியை யடைந்தவர்களாய் அலங்கோலமாய்த் தெருவில்வந்து நின்றுக்கொண்டு இங்குமங்கும் ஓடினார்கள். எம்டன் கப்பலின் வெளிச்சமானது நன்றாகத் தெரிந்தது. எம்டன்போட்ட குண்டுகளுக்குப் பதிலாக காஸிமோட்டிலிருந்து மூன்றுகுண்டுகள் அதிகாரிகளால் போடப்பட்டன. பிறகு எம்டன் தனதுவிளக்கை அணைத்துக்கொண்டு புதுச்சேரிப் பக்கம்போயிற்று.

சேதங்கள்.

1. குண்டுபட்டு இரண்டு போலீஸ்காரர்கள் இறந்து கிடந்தார்கள். அவர்களுடைய சவங்கள் மரணசோதனைக்காக எடுத்துக்கொண்டுப் போகப்பட்டன.

2. சமுத்திரத்தில் கட்டி வைக்கப்பட்டிருந்த, ரங்கூன், பின்லே ப்ளெய்மிங் கம்பெனியாரின் இரண்டு லக்ஷம் ரூபாய் பெறுமான கிரோஸின் எண்ணெய்க் கிடங்கு தீப்பற்றிக் கொண்டு எறிந்து போயிற்று. இதர நஷ்டங்கள் ரூபாய் $1\frac{1}{2}$-லக்ஷம் மொத்தம் $3\frac{1}{2}$-லக்ஷம்.

3. அவைகளுக் கருகிலிருந்த ஒருமகமதிய காவல்காரன் இறந்தான்.

4. அப்பொழுது அப்பக்கம் போய்க்கொண்டிருந்த ஒரு வாலண்டியர் கையில் காயமடைந்தார்.

5. சூளையில் க்ரையான்குட்டைக் கருகில் மூன்று கூலிக்காரஸ்திரீகள் பலத்த காயமடைந்தார்கள்.

6. துறைமுகத்தைச்சேர்ந்த நாலு வேலைக்காரர்கள் காயமடைந்து ஆஸ்பத்திரியில் கிடக்கிறார்கள்.

7. கப்பலில் காயமடைந்த மூன்று வேலைக்காரர்கள் இறந்துவிட்டார்கள்.

8. சூளையில் வெங்கடாசல முதலிதெருவில் ஒரு குண்டுவிழுந்து வீடு விழுந்துவிட்டது. அங்கே ஒருவருக்குத்தான் காயம்பட்டது.

9. மேற்படிதெருவில் உரலில் இடித்துக்கொண்டிருந்த இரண்டு ஸ்திரீகள் கையிலும் காலிலும் காயமடைந்தார்கள்.

10. பட்டணம் போலீஸ் கோர்ட்டில் ஒரு கண்ணாடி உடைந்தது.

11. ஹைகோர்ட்டில் சில இடங்களில் சுவர்களைச் சேதப்படுத்தி யிருக்கிறது. ஜெனரல் போஸ்டாபீஸ் கட்டடத்திலும் சிறிது குறி பட்டிருக்கிறது. பட்டணத்தில் பல இடங்களில் குண்டுவெடித்த சல்லிகள் விழுந்துகிடந்தன. இதன் காரணமாக அறியாஜனங்கள் பயந்துக்கொண்டு தங்கள் தங்கள் கிராமங்களுக்குப் போகிறார்கள். சென்னைமா நகரில் சண்டை நடக்கப்போகிறதென்று பயப்படுகிறார்கள். ஏதோ ஒருகப்பல் ஓடி ஒளிக்கும் போக்கில் சில குண்டுகளைப்போட்டதினால் பெரிய சண்டை நடக்குமென்று சொல்லலாமா? நாலு, ஐந்து நாள்களுக்குள் அறுபதினாயிரம் ஜனங்கள் பட்டணத்தை விட்டுப் போய் விட்டார்களாம். அதிகாரிகள் உண்மையான செய்தியை விளக்கிக்காட்டி பலபாஷைகளில் விளம்பரத் துண்டுகள் பிரசுரித்தாவது, தண்டோராப் போட்டாவது ஜனங்களுக்கு பயமில்லை யென்பதை வெளியிட்டார்களானால் மிகவும் நன்றாயிருக்கும். சென்னைமாநகரின் தலைவர் உதகமண்டலத்திலிருந்து சென்னைவந்தது ஜனங்களுக்குத் தைரியத்தைக்கொடுத்தது. இப்பொழுது அவர்திரும்பிப் போகிறாரென்பதுஜனங்கள் பயப்படுவதற்கு இடம் கொடுத்திருக்கிறது. நமதுராஜப் பிரதிநிதி எம்டன் கப்பலைப்பிடிக்க, பிரிட்டிஷ் ஜப்பான்சண்டை கப்பல்கள் அதைத் துரத்திக்கொண்டிருக்கின்றன வென்றும் சென்னைமாநகரைக்காப்பாற்ற சண்டைக் கப்பல்கள் வந்துக்கொண்டிருக்கின்றனவென்றும் அபயம் கொடுத்திருக்கிறார். படித்தவர்கள் நிஜமான செய்தியை அறிந்தவர்களாயிருப்பதால்ராஜப்பிரதிநிதியின் அபயத்தினால் தைரியமாயிருக்கிறார்கள். படிக்காத கூலிவேலை செய்பவர்களும், தொழிலாளிகளும் என்ன செய்வார்கள்! அவர்கள் அவர்களுடைய தலைவர் செய்கிறபடி செய்கிறார்கள். அவர்கள் தலைவர் சென்னை வந்து சேதமான இடங்களைப்பார்த்தார். ஜனங்கள் தைரியமடைந்தார்கள். தலைவர்வந்தார்: "எம்டன்" கப்பல் பண்ணின லூட்டியைப்பார்த்தார். இரண்டு நாளில் திரும்பிப்போகப் போகிறார் என்றால், ஓஹோ, அவர் "எம்டன்" மறுபடியும் வரப்போகிறதென்று போகிறார், நாமும் போவோமென்கிறார்கள். பரிதாபம்! தலைவர் இங்கு தங்கியிருந்து ஜனங்களுக்குத் தைரியம் கொடுத்தால் நன்றாயிருக்கும். படிக்காத ஜனங்கள் வீண்பயத்தினால் ஊர்களுக்குப் போவதைத்தவிரச் சென்னைமாநகர் அமைதியாகவே யிருக்கிறது.

[கவர்ன்மெண்டார் அக்டோபர்மீ 13௳ மலையைவிட்டிறங்கி 15௳ சென்னைக்கு வருவார்கள். உடனே கவர்னர் சுற்றுப்பிரயாணம்போகிறார். நவம்பர்மீ 10-ந் தேதி வாக்கில் திரும்பிச் சென்னைக்கு வருவார்.]

## "THE IMPERIAL INDIAN RELIEF FUND"
### H. E. The Governor on "Madras and the War"

## "இம்பீரியல் இந்தியன் ரிலீப் பண்டு"

கவர்னரும் ''சென்னைமாநகரும் யுத்தமும்''

ஸெப்டம்பர் மாதம் 29-ந் தேதி காலை பத்து மணிக்கு, கவர்ன்மெண்டு ஹவுஸில் இம்பீரியல் இந்தியன் ரிலீப் பண்டினுடைய சென்னை மாநகரின் ஜெனரல் கமிட்டியானது, கவர்னரை அக்கிராசனாதிபதியாக வைத்துக்கொண்டு கூட்டம் கூடிற்று. சுமார் அறுபது மெம்பர்கள் வரையிலும் வந்திருந்தார்கள். அக்கிராசனாதிபதியவர்கள் ஆரம்பமாக, ஜெனரல் கமிட்டி செய்திருக்கும் வேலையைப்பற்றி புகழ்ந்துப் பேசினார். பிறகு பின்வரும் தீர்மானங்கள் தீர்மானிக்கப்பட்டன.

தீர்மானங்கள்.

1. ரிலீப் பண்டுக்கு தங்களாலியன்றமட்டும் தாராளமாக பணஉதவி செய்தவர்களுக்கும், கமிட்டியின் காரியதரிசிக்கும் பொக்கிஷதாரருக்கும் ஆங்கில, தமிழ், பேபர்காரர்களுக்கும் வந்தனங்கள். மேற்படி தீர்மானத்தை முன் கொண்டுவந்து, ஸர் ஜான் வாலிஸ் அவர்கள், சென்னை வாசிகள் தங்களாலியன்ற மட்டும் தாராளமாய் பணஉதவி செய்ததோடு கூட, கமிட்டியோடு கூட மனப்பூர்வகமாய் உழைத்தார்களென்றும், அவர்களின் உதவியில்லாமல் கமிட்டியார் சரியாக உழைத்திருக்க முடியாதென்றும் சொன்னார்.

மேற்படி தீர்மானமானது திவான் பகதூர் கோவிந்ததாஸ் சதுர்புஜதாஸ், ஜஸ்டிஸ் டையாப்ஜி இவர்களால் ஆமோதிக்கப்பட்டது.

2. வசூல் பண்ணப்பட்டத் தொகையில் முக்கால்வாசி, யுத்தத்தில் மடிந்த வீரர்களின் குடும்ப ரக்ஷணார்த்தமாக செலவழிக்கப்படுவதற்காக ஸிம்லாவுக்கு அனுப்பப்பட வேண்டும். மீதி கால்வாசியானது சண்டையினால் வேலை முதலியவைகளில்லாமல் கஷ்டப்படும் குடும்பங்களின் உதவிக்காக செலவழிக்கப்பட வேண்டும். மேற்படித் தீர்மானமானது ஸர் ஹ்யூ ப்ரேஸரால் கொண்டுவரப்பட்டு மிஸ்ஸஸ் பெஸண்ட், எஸ். கஸ்தூரிரங்க அய்யங்கார் இவர்களால் ஆமோதிக்கப்பட்டது.

3. இங்கு யுத்தத்தின் காரணமாக கஷ்டப்படும் குடும்பங்களுக்கு உதவி செய்வதற்காக ஒரு எக்ஸிகியூடிவ் கமிட்டி ஏற்படுத்தப்பட வேண்டும். இந்தத் தீர்மானம் ஸர் ஹாரல்டு ஸ்டுவேர்ட் அவர்களால் பிரேரேபிக்கப்பட்டு, பின் வரும் கமிட்டி ஏற்படுத்தப்பட்டது.

பிரஸிடெண்ட்.—கவர்னர்.

அங்கத்தினர்கள்.—ஸர் ஜான் வாலிஸ், ஸர் ஹாரல்டு ஸ்டுவேர்ட், மிஸ்டர் எபட்டர்வொர்த், ஸர்ஹ்யூக்ப்ரேஸர், மிஸ்டர் எ. இ. லாஸன், மிஸ்டர். ஜெ ஒ. ராபின்ஸன், மிஸ்டர், டி. ஆர் ரிச்மண்ட், ராவ்பகதூர் பி. என். ஸர்மா, கான்பகதூர் குடுஸ்பாக்ஷா ஸாஹிப்.

கௌரவ காரியதரிசி.—மிஸ்டர் ஸி. பி. காட்டரல். மேற்படி கமிட்டிக்கு, இன்னும் மெம்பர்களைச் சேர்த்துக்கொள்ள அதிகாரம் திவான்பகதூர் எல். எ. கோவிந்தராகவ அய்யர் அவர்களின்பிரேரேபணையின்பேரில் கொடுக்கப்பட்டது.

பிறகு கவர்னர் எம்டனைப்பற்றி பேசினார். எம்டனைப் பற்றி பயப்படுவதற்கு யாதொரு காரணமுமில்லை. எம்டனைப் பிடிப்பதற்காக பல பிரிட்டிஷ் கப்பல்கள் வங்காளக் குடாக் கடலிலும் இந்திய மஹா சமுத்திரத்திலும் அதைத் தேடிக்கொண்டிருக்கின்றன.

எம்டனை இந்த இரண்டு சமுத்திரங்களிலும் தேடுவது வைக்கோல் போரில் ஒரு ஊசியைத் தேடுவது போலிருக்கிறது. சென்னைவாசிகள் எம்டனாவது வேறு எந்த ஜர்மனிக் கப்பலாவது அவர்களை மறுபடியும் தொந்திரவு செய்யுமென்று ஸ்வப்னத்திலும் பீதியையடையவேண்டாம். சென்னைமாநகரானது இப்பொழுது அரசாங்கத்தாரால் நன்றாகக் காக்கப்பட்டு வருகிறது. வந்திருந்த அங்கத்தினர்களை இப்பொழுது ஜனங்களுக்குள் பரவியிருக்கும் பொய் வதந்திகளை மறுத்து தைரியம் சொல்லும்படிக் கேட்டுக்கொண்டார். பிறகு அக்கிராசனாதிபதி யவர்களுக்கு ஸர் ஜான் வாலிஸ் அவர்கள் வந்தன மளித்த பிற்பாடு யாவரும் கலைந்தனர்.

# THE VIVEKACHINTAMANI

## WAR NUMBER

**A HOUSEHOLD NARRATIVE OF CONTENDING FOLKS IN THE GREAT WAR OF 1914.**

**Issued in three monthly parts : November, December, and January.**

# விவேகசிந்தாமணி

## "யுத்தகாண்டம்"

**"உன்னதமாம் பார’தப்போர் செய்வார் கதை."**

நவம்பர், டிஸெம்பர், ஜனவரி மாசங்களில் மூன்று பாசங்களாகப் பிரசுரிக்கப்பட்டது.




*"We need help from Above, for without it we are helpless"—Admiral Sir John Jellicoe.*

PUBLISHED BY

THE SECRETARY, DIFFUSION OF KNOWLEDGE AGENCY,

SOLE AGENTS AND MANAGERS : THE LALITA PUBLISHING CO.,
LALITALAYA, 19, ADAM STREET, MYLAPORE,
MADRAS, S.

**Price Re. 1-As. 2. by V. P. P.]** [விலை ரூ. 1-அணா 2. வி. பி. பி.

# விவேகசிந்தாமணி—"யுத்த காண்டம்".

## உன்னதமாம் பாரதப் போர் செய்வார் கதை.

### முதற்பாகம் (நவம்பர்மீ)

## பொருளடக்கம்.

### இரண்டாம்பாகம் (டிஸம்பர்மீ.)

# LIST OF ILLUSTRATIONS.

## படங்கள் விவரம்.

உ

# IN LOVING AND GRATEFUL MEMORY OF

(i) MY SAINTLY MOTHER (SRI LOKANAYAKI AMMAL)

WHOSE LOVE OF TRUTH HAS PRESERVED TO US THE PRECIOUS HERITAGE OF

"THE GOSPEL OF THE HOLY MOTHER,"

AND

(ii) OUR CIVIC MOTHER (HER EXCELLENCY LADY HARDINGE, C. I.,)

WHOSE LOVING INSTITUTION OF "THE CHILDREN'S DAY"

HAS BEQUEATHED TO US, THE CHILDREN OF INDIA,

'THE RICHEST OF ALL INHERITANCES," *viz.*, "THE EVER INSPIRING IDEAL OF HEROIC WOMANHOOD,"

THIS HOUSE-HOLD NARRATIVE OF CONTENDING FOLKS

IN THE GREAT DEVASTATING WAR OF 1914,

IS DUTIFULLY INSCRIBED BY THEIR DEVOTED SON AND CHILD,

*on the Day of Light sacred to 'Kartikai' ushering in the 'Great Dawn of Hope' to the Powers of Light.*

## அர்ப்பணம்:

**I**

அன்னையே, எனையீன்ற அருந்தவக் கொழுந்தே,
உன்னையே நினைந்துள்ள முருகினன் சேய்!
பின்னையே நனைச்சூட்டும் "ஆனந்தத் தாய்மொழி"
தன்னையே அறிந்துய்யத் தாரகமா யிருந்தனையே!

**II**

தாயன்பா லென்னம்மை ஹார்டிஞ்சு பெருமாட்டி
தூயவராம் குழந்தைகளைத் தன்னிதயத் துள்ளிருத்தி
சீயவராம் காவலர் கோன் ப்ரதிநிதியாம் பர்த்தாவின்
ஸ்ரீஜயந்தி கொண்டாடச் சொன்னவர்தம் பேர்வாழ்க,—

"துன்பம்வந் துற்றாலும் என்புறக் கிழியவே
'அன்புமிகுந் தவரம்மா! பாலரைச் சிந்தித்துள்
'என்புதோல் போற்றிய இத்தேகம் வருந்தினும்
'அன்புரு வாம்பாலர் மகிழ்வதுவே பெரிதென்றார்."—

அன்னவரை நினைந்துள்ளே அவர்பெருமை யாம்பெறவே
சின்னவராம் பாலர்களைத் திருவிழாக்கொண் டாடச்செய்த
அன்னையவர்: எம்முள்ளே ஸமஷ்டிஞானம் † உதிக்கச்செய்தார்:
புன்னைவனம் போலேயவர் புகழுடம்பைப் போற்றியுள்ளே,—

பொன்னம் பலநடுவே பொதுநடம் செய்யுமீசன்
மன்னுபேர் அருளாலே மாநிலத்தில் நடக்கக்காணும்
உன்னதமாம் பார்-அதப்போர் செய்வார்கதை கேட்கவென்று
சின்னஞ்சிறியார்க்கும் சிறுமனங்கொண்டார்க்கும் எளிதாகப் புரிகதையாச்

சொன்னதையிங் கெனையீன்றாள், எந்தாய்க்கும்
பொன்னகம்போ லிச்சகவாழ் வெங்கட்குப்
பொருந்தவென்றே பாலர்மனம் விரியச்செய்த
அருந்தவத்தாய் ஹார்டிஞ்சுக்கும் அர்ப்பணமாய்

எழுதிவைத்தோம்: கடமையிது, கார்த்திகைநாள்: காண்பீர்மன்னே!



(† 10-வது பக்கம் பார்க்க.)

## "ஸர்வம் விஷ்ணுமயம் ஜகத்!"

## 'ஏன்' நதிதீரத்தில் "உன்னதமாம் பார்தப்போர்" நடக்கும் யுத்தகளம்.

### ஸெப்டெம்பர்மீ 12வ இரவு முதல் இன்னும் நடந்துவருகிறது.

(வி. சி. யுத்தகாண்டம் 11-19-வது பக்கங்கள் பார்க்க.)

'The purpose is plain. As this great tragedy proceeds it becomes increasingly clear that the issue that is being fought at this moment in the trenches of the Aisne is not this or that national gain or loss but *the spiritual Governance of the World.*"—Vide *Vikekachintamani War Number*, Part I, pp. 6 & 11-19.



*War News.* *Illustrated.*

"The great Battle of the Aisne, which has been in progress since the evening of the 12th instant." * "A panoramic View of the Scene of Action where our troops "are fighting just across that river along the whole of our front."—* Sir John French's Message of September 17, 1914.



His Excellency Lord Hardinge, Viceroy & Governor General of India from a photo (*Lafayette*) published in 1910.

கனம்பொருந்திய அரசர் பிரதிநிதி லார்ட் ஹார்டிஞ்ச் அவர்கள்.



H. E. Lady Hardinge (m. 1890) with Her Excellency's only Daughter the Hon'ble Diamond Hardinge (born 1900) from a photo (*Rita Martin*) published in 1910.

கனம். ஹார்டிஞ்ச் பெருமாட்டியும் அவர்களுடைய ஏகபுத்திரி கனம் டயமண்ட் ஹார்டிஞ்ச் பெண்மணியும்.



**THE BRAVE KING OF THE BELGIANS AND THEIR HEROIC QUEEN.**
பெல்ஜியம் தேசத்தார் ராஜசிங்கமும் அவர்கள் தீரம் மிகுந்த ராணியும்.
(வி. சி. யு. 39-40 பக்கம் பார்க்க.)



**The Various kinds of Gun Fire employed in Modern Artillery Practice.**

தற்காலத்தில் உபயோகிக்கப்படும் பலவிதமான பீரங்கிகளின் குண்டுகள் வெடிக்கும் விதம்.



**GENERAL LEMAN.**
**The History of whose defence at Liege will live for all time.**

ஜெனரல் லீமான்.
லீஜ்கோட்டையை காப்பாற்றுவதற்காக கோரயுத்தம் புரிந்த தீரர். அவருடைய தீரத்தை எப்பொழுதும் மறக்க முடியாது.



**His Majesty the KING.**
IN ADMIRAL'S UNIFORM
நமது மாகூஷிமை பொருந்திய ஜார்ஜ் அரசர்.
(சப்பல்படைத் தலைவர் உடையில்.)



**Field Marshal LORD KITCHENER**
**Secretary of State for War.**
பீல்ட் மார்ஷல் லார்ட் கிச்சனர்,
யுத்த மந்திரி.

"Huge columns of Germans advanced in the neighbourhood of Lille during the third week of October and by sheer impetuous onset beat some British troops out of their trenches and came up against the Indian Supports. The Sikhs and Gurkhas swung into the enemy with the utmost fervour. Back past our own evacuated trenches up the little slopes behind which they had collected and down the reverse went the Kaiser's Soldiers, while Sikh Bayonet and Gurkha Kukri played havoc among their disordered ranks."

இந்தியர்கள் ஜர்மானியரை ஹதம் செய்து துரத்தல்.



லீல் கோட்டைக் கருகாமையில் ஜர்மானியர்கள் கூட்ட பலத்தினுல் சில பிரிட்டிஷ் ஸைன்யங்களைத் துரத்தி, இந்திய ஸைனியங்களிருக்குமிடத்திற்கு அக்டோபர்மீ மூன்ருவது வாரத்தில் வந்தார்கள். இந்தியர்கள் வீராவேசத்துடன் சண்டையில் புகுந்ததும் ஜர்மானியர்கள் அலங்கோலமாக தாங்கள் பிடித்த இடங்களை யெல்லாம் விட்டு விட்டு ஒடிஞர்கள். சீக்யஜாதி வீரர்கள் பேயனெட்டுகளாலும் கூர்க்க ஜாதி வீரர்கள் குக்ரி யென்கிற சிறு கைக்கத்தியாலும் ஜர்மன் துருப்புகளைக் குத்தியும் வெட்டியும் ஹதம் செய்வதைக் காட்டும் படம்.

# The Faith That Made a Nation Whole.

"I give you the message of Faith"—*H. E. Lord Hardinge.*

THE "ALL-INDIA CHILDREN'S MEMORIAL" 1913.

LOVINGLY INSTITUTED IN HONOUR OF THEIR EXCELLENCIES LORD AND LADY HARDINGE OF PENSHURST TO PERPETUATE THE "CHILDREN'S DAY" IN INDIA AND THE IDEAL OF SOCIAL SERVICE.

"REALIZATION": A "GREAT TASK"




**INDIA'S ONE MESSAGE:**
**"PEACE AND GOOD WILL BE UNTO THEE."**

**"India's Future":**
**"A Crown of Glory to the British Nation" and A Tower of Strength to the Kingdom of God on Earth.**

**"DALAPANGALA":**
**"THE STRIVING STRUGGLING MARCH OF CIVILISATION."**

# "LOYAL INDIA'S PRAYER"

## FOR KING, COUNTRY AND CAUSE.

*(PRO REGE GREGE LEGE)*



மாக்ஷிமை தங்கிய நமது சக்ரவர்த்தி, (இந்திய இராணுவ உடையில்.)

**The King-Emperor as Colonel-in-Chief of King George's Own Lancers (Indian Army).**

*King George's Message to the Princes and People of India : September 10th* 1914.

" Among the many incidents that have marked the unanimous uprising of the population of my Empire in defence of its unity and integrity, nothing has moved me more than the passionate devotion to my Throne expressed both by my Indian subjects and by the Feudatory Princes and the Ruling Chiefs of India, and their prodigal offers of their lives and their resources in the cause of the realm. Their one voiced demand to be foremost in the conflict has touched my heart, and has inspired to the highest issues the love and devotion which, as I well know, have ever linked my Indian sub jects and myself."

"God save our gracious King!
Long live our noble King!
God save the King!"
Hear England's, India's, prayer!
From peril, fear, and snare—
Whatever foes may dare,
God save the King!

God save our Empire-State
From perils small and great
Of land, sea, air!
In cities, towns and marts,
In all the Empire's parts,
In many million hearts,
Resounds the prayer.

Since man on earth appeared,
Since the first tomb was reared,
Since death's alarms
First struck in hearts dismay,
Has never been such fray:
For Earth beholds to-day
A world in arms.

Death's Angel every hour
Mows down the richest flower
Of every race:
Fair lands and fertile climes!
Your muffled Christmas chimes
Lament the cruel times
In every place.

Your dearest kith and kin
Grim death hath garnered in:
And yet take heart!
Was ever France so fair?
For Britain's best are there,
With India's sons, who bear
Nobly their part.

England hath pledged her hand
By Chivalry to stand,—
Witness the Lord!
Hearts that in union beat!
Hands that each other greet!
From many lands ye meet,—
To keep the word.

From clash of sword and steel,
From cannon's thunder-peal,
Springs a new fire!
Our country's Empire's cause
Is holier than it was:
A higher law than laws
Binds son and sire;

Binds families and friends,
Seals rights and wrongs amends;
In death is life!
From Eastern, Western end,
The Empire's sons attend
And creed and colour blend
In friendly strife.

For all our friends to-day
O God! we humbly pray:
Help us, O Lord!
We trust our cause is thine,
And trusting, we combine:
Let freedom fairer shine
For peace restored!"

## Hridanjchali.—*The Heart's Tribute.*

### THE CHILDREN'S ANTHEM.

"Her eyes are homes of silent prayer."—*Tennyson.*

"Thrice blest whose lives are faithful prayers
Whose loves in higher love endure;
What souls possess themselves so pure
Or is there blessedness like theirs."—*Tennyson.*

" அம்மா தாயே காப்பாற்று !
அடியேம் குழந்தைகள் சொற்கேட்டு!"

———

## "THREE WORDS OF STRENGTH."

### "HOPE, FAITH AND LOVE."

I

Hardinge, My Lord, true-hearted Son of Man;
On bended knees I bow to the Christ in thee
And pray to the Voice of Faith that urged "Go on!"
Heeding not the demon that tore thy flesh from thee.

II

England's Empire over the raging seas
She owes to Nelson's Voice of * Duty t' be done!
England's Empire over the Mind that feels
That 'Lady with the lamp' † founded on her 'Duty done.'

III

England's Empire over our people's heart
The mother-heart of Victoria the Good did found
But the Empire of Man over hearts that smart
The Voice of 'Faith that faltered not' *alone* could found!

IV

Henceforth' n Imperial Delhi's Crown shall stand
Thy Glorious Form of Faith on Elephant mounted
The' ternal symbol of the Spirit that stand
And Guide a Nation's path to the Goal it counted.

V

The Sovereign-Lord his message of Hope did give;
Our own true Lord, the Viceroy. gave us Faith!
'Tis now India's turn Her Supreme Message to give :
And that's *Love to thee and thine surpassing both Hope and Faith.*

*Aum ! Peace ! Peace ! Peace !.*

---

* " England expects every man to do his duty."
† Miss Florence Nightingale.

## THE SHOCK-ING STORY OF PROUD WILL-I-AM.

(*From Punch's Almanack of* 1915.)

"Once there was a (Gentleman) Man named WILL-I-AM. He was a Soldier, and a Sailor (with a lovely fleet of Canal BOATS), and all sorts of Other things be-sides. He could do everything better than any-body else : He was It. He was so proud that his boots hurt. He had a mailed Fist, a tame Eagle, and a beautiful sticky-up Moustache. Also he had two friends—(Only one of them was'n't very keen).

Now WILL-I-AM was very fond of dream-ing. There was one lovely dream where he was Emperor of the Earth, and Alex-ander and Napo-lean and Cæsar and all those people were in the back seats. But he could never really enjoy his dream, because of a cock and a Li-on and a Big Bear who lived near him and used to disturb his rest. So he thought it all out, and at last One Day he decided to give them What For. He fetched one of his two Friends—the Other One thought he wouldn't come, thank you—and said to him, " Look here just you go and sit on that Bear. My Eagle will knock the stuffing out of the Old Cock ; and I am going to tame that con-tempt-i-ble litt-le Li-on. Li-on-taming my Long Suit. Now watch, and you will see a Circus ! "

But the Cock turned out to be a fight-ing Cock ; and the Li-on some-how did-n't see his way to be-ing tamed. So Will-i-am pre-tend-ed he did-n't real-ly mean an-y-thing, and turned back towards Home. The Li-on and the Cock have very kindly pro-mised to see him right up to his Door : and there he will find the Big Bear sit - ting on his poor friend waiting to welcome him.

I do not think that he will be able to enjoy his silly Dreams for quite a little while."—William Bernard Partridge in the Punch. (*See P.* 324.)

## உன்னதமாம் பார்ஹதப்போர் விளைகூத்தை விளக்கினர் பார்.




"The titanic struggl nto which the German Kaiser has plunged himself has gathered against him another foe in Japan. He no ghts five enemies—France, Belgium and England in the West, and Russia in the East of Europe, and Japan in a.—*From the Punch.*

## உன்னதமா யார்ஹதப்போர் விளைகூத்தை விளக்கினர் பா.

I

முன்னமிங்கே தன்னுஆ ராமன் மன்னர்க் குபதேசங்கள்
மன்னுகூர் புத்ாலே வேடிக்கையாகவே விகடத்தால்
பன்னினர்போலண்டனிலே 'பஞ்ச்'என்ற விகடரத்னம்
மன்னர்மானிரன்றே'சரிவாரி' யாகவேயிருந்து போதிக்கிருர்.

II

உன்னதமாம் ஹதப்போர் செய்வார்கதை படிக்குஞ்சிருர்
மன்னுபோர் பார்பட மத்தியிலேயிற்குமுரு கேய்ஸர் என்பார்
உன்னதப்போர்ளைத்த அவர் உக்கிரமாய்ப் பரசேந்தி
தன்னுடைய வ்செருக்கால் சண்டைசெய்யப் புறப்படு'ருர்.

III

புறப்படவும் சுயுள்ள தேசமன்னர் அவரையெதிர்த்
தொருபுறத்தில்டிக்கொடி யுடையருஷ்யா தன்வலியாலவரைத்தாக்க
ஒருபுறத்தில் டைநாய்க் கொடியுடையபெல்ஜியமதை மிதிக்கப்பாய்ந்ததுகெள
[வுதுபார்
மறுபுறத்தில் பவக்கொடி யுடைப்ரான்ஸ் பாய்ந்துசண்டைசெய்'றதுபார்!

IV.

அலைகடலைத் தடியதோ ஆங்கிலசிங்கம் பாய்'றதுபார்
தொலைதூரத்திர்ளஜப்பான் தாக்கியவரை முடுக்குதுபார்
தொலையாச்சண்_யிதெத்தனைபேர்கள் எதிர்த்துவந்தாலும் பார்ப்பேன் ஒருகை
[யென்
றலையாதுபூரசுயேந்தியேயுக்கிரமாச் சண்டைசெய் கேய்ஸரின் கூத்தைப்பாரே!
குலையில்நிலையில்லை நிலையில்லை யெல்லாமோர் யுத்தக்காடே!